# கல்கி

KALKI 22.1.89 ரூ. 2.






# மெஜாரிட்டி கிடைக்குமா?

—நேரடிச் செய்திகள்

# வண்ண
# வண்ணத்
# திருவிழாவிலே—
# மங்கை
# எண்ணமதைக்
# கவர்ந்திடுவாள்!



திருவிழாக்
காலங்களில்
திருமகளைக்
காட்டி
அளிப்பீர்,
எண்ணற்ற
வண்ண
பட்டுப்புடவைகளின்
ஜாலத்திலே!
நிகரற்ற தரம்.
எண்ணிலடங்கா
டிசைன்கள்.
இன்முகத்துடன்
சேவை.
இவை
அனைத்திற்கும்
சிறந்த
ஷோ-ரூம்...
லக்ஷ்மி
சில்க்
ஹவுஸ்!

ஞாயிற்றுக்கிழமைகளில்
திறந்திருக்கும்.








## லக்ஷ்மி சில்க் ஹவுஸ்

பனகல் பார்க் எதிரே, மாடியிலே தி-நகர், சென்னை 600 017.

**Our Associate:** லக்ஷ்மி சில்க் ஹவுஸ்

மாதுங்கா (மத்திய ரயில்வே), பம்பாய் 400 019.

திரைவிருக்கட்டும், எங்கள் ஷோ-ரூம் மாடியில் உள்ளது.

market movers/LSH/1031/87 Tamil

தேர்தல் அறிக்கைகள், அந்தந்தக் கட்சிகளின் பொருளாதாரத் திட்டங்களை அடிப்படையாகக் கொண்டதாக அமையும்; நிபுணர்கள் அதில் பங்கு பெற்றிருப்பார்கள் — பிற நாடுகளில்! நம் நாட்டிலோ, ஏதோ உடன் பிறப்புக்கு எழுதும் கடிதம் என்று நினைத்துக் கொண்டு தி. மு. க. தேர்தல் அறிக்கையைத் தந்திருக்கிறது. ஜெ — ஜா அணியினர் ஏதோ மேடைப் பேச்சு என்று எண்ணிக் கொண்டு தேர்தல் அறிக்கையை வெளியிட்டிருக்கிறார்கள். காங்கிரஸ் உள்பட எந்தக் கட்சிக்குமே



# தேர்தல் அறிக்கைகள் — காகிதப் பூ!

டாக்டர் எம்.எஸ். உதயமூர்த்தி

அதன் தேர்தல் அறிக்கையில் அதற்கே நம்பிக்கையில்லை. அதனால்தான் எல்லாக் கட்சியினருமே சினிமா நட்சத்திரப் படையை நம்பிச் செயலாற்றுகிறார்கள்.

எல்லாக் கட்சிகளுமே வாயளவில் ஊழலற்ற ஆட்சியை, தூய்மையான ஆட்சியைத் தருவோம் என்று கூறி இருக்கிறார்கள். ஊழல் பெருச்சாளிகள் ஊழலற்ற ஆட்சியைத் தருகிறோம் என்பது நம்ப முடியாததாக இருக்கிறது!

முதலில் வந்த காங்கிரஸ் தேர்தல் அறிக்கையில் சொத்துக் கணக்கு, ஊழல் விசாரணைக்கு விசேஷ நீதிமன்றங்கள் பூரண மது விலக்கு என்று சில நல்ல விஷயங்கள் இருக்கின்றன. ஆனால் லோக்பால் மசோதாவைச் சிதம்பரம் வாபஸ் பெற்றதையும் காங்கிரஸ் ஆளும் பிற மாநிலங்களில் மது விலக்கு அமுல்படுத்தப்படாததையும் எண்ணுகையில் நமக்குச் 'சப்'பென்று ஆகி விடுகிறது. பினாமி நிலச் சீர்திருத்தம், 25 லட்சம் பேருக்கு வேலை வாய்ப்பு, விவசாயக் கடன் ரத்து என்று வரும் போது நமக்குத் திகைப்பாக இருக்கிறது. பினாமி நிலச் சீர்திருத்தத்தை உண்மையிலேயே கொண்டு வருவார்களா — மூப்பனார் மீதே 'பினாமி நிலச் சொந்தக்காரர்' என்ற குற்றச்சாட்டு எதிர்க் கட்சியினரால் சொல்லப்படும் போது? — என்ற கேள்வி நம்முள் எழுகிறது. நடுவர் தீர்ப்புக்குக் காவிரி நதிப் பிரச்னையை விடப் போகிறார்கள் என்றால் ஆளுநர் ஆட்சியிலேயே வேகமாகச் செய்திருக்கலாமே? இதற்கு ஏன் மீன மேஷம், நாள் நட்சத்திரம் பார்த்துக் கொண்டிருக்கிறார்கள்? சொல்வது நம்புகிறாற் போல இல்லையே! என்று தோன்றுகிறது.

தி. மு. க., "விரைவு ரயில் திட்டத்தைச் செயல்படுத்துவோம்!" என்று கூறுகிறது. ஜானகி அணியோ, சேலத்தில் நாணய உற்பத்தித் தொழிற் சாலையை அமைப்போம் என்றும் கரூர், திண்டுக்கல், தூத்துக்குடி அகன்ற ரயில்வே பாதையைப் போடுவோம் எனவும் தஞ்சையில் நடக்கும் எரிவாயு வேலையைத் துரிதப்படுத்துவோம் என்றும் கூறி உள்ளது.

எம்.ஜி.ஆர். முதன் முறை தேர்தல் கூட்டங்களில் பேசிய போது "கார்டு கவர் விலையைக் குறைப்பேன்!" என்று கூறியதாகப் பலரும் அவரைக் கேலி செய்தனர். மாநில — மத்திய அரசின் உரிமைகளை உணராதவராக அவரை எடுத்துக் காட்டினர்! இன்று தி.மு.க.வும் ஜா. அணியும் கூறுவது கார்டு கவர் விலையைக் குறைப்பது போன்ற காரியம்தான். விரைவு ரயில் விடுவதும், நாணயத் தொழிற்சாலை அமைப்பதும் மத்திய அரசாங்கம் செய்ய வேண்டிய காரியங்கள்! அவர்களின் எல்லைக்குட்பட்ட விஷயங்கள்!

"நூறு கோடி ரூபாயில் சோடா ஆஷ் தொழிற்சாலையை ஏற்படுத்துவோம்" என்று தி. மு. க. அறிக்கை கூறுகிறது.

வேதாரண்யத்து மக்கள் இதற்காகப் போராடி இதை முன்பே — மூன்று மாதங்களுக்கு முன்பே — பெற்று விட்டார்கள்! அவர்கள் சாதனையை இவர்கள் தங்கள் சாதனை என்று உரிமை கொண்டாட நினைப்பது வேடிக்கை.

மற்றபடி கூட்டுறவுக் கடன் ரத்து, இலவச வேஷ்டி சேலை, பொங்கல் இனாம், தீபாவளி இனாம், தமிழ்ப் புத்தாண்டு இனாம் என்று திமுக, எம்.ஜி.ஆர். பாணியிலே வாக்குறுதிகளை வழங்கியிருக்கிறது. ஏழையின் நிலையை உயர்த்துவதற்குப் பதில் அவனைப் பிச்சைக்காரனாக்கும் திட்டங்கள் இவை.

**ஜா**னகி அணி ஒரு படி மேலே சென்று, 'ஒரு கிலோ அரிசியை ஒரு ரூபாய்க்குத் தருவோம்' என்று முழங்கி இருக்கிறது. 325 கோடி ரூபாய்க்கு விவசாயக் கடன் ரத்து பற்றிப் பேசியிருக்கிறது. பணம் ஏதோ மழையாகப் பொழிவது போலவும், கஜானா திறந்து கிடப்பது போலவும் ஜா. அணியும் ஜெ. அணியும் அறிக்கைகள் விட்டிருக்கின்றன. பொருளாதார ஞான சூன்யங்கள் என்றுதான் இந்த இரு அணியினரையும் குறிப்பிட வேண்டும்.

ஜெ. அணி ஆட்சியில் கடையில் அரிசி கிலோ 1¾ ரூபாய்க்கு விற்குமாம். எம்.ஜி.ஆர். உண்ணாவிரதமிருந்து மத்திய அரசிடமிருந்து அரிசி பெற்றது போல் பெறுவார்களாம்! ஆஸ்திரேலியாவிலிருந்து நிலக்கரி வாங்கி வந்து நமக்கு அனல் மின் நிலையம் தருவார்களாம்! காதுலே பூ சுற்றுகிறார்கள்! இலவச மனை, இலவச பஸ் பாஸ், பெண்களுக்கு இலவசப் பட்டப் படிப்பு என்று ஒரே இலவசம்தான்! இலவச மாதச் சம்பளம் என்றும் அறிவித்து விட்டால் நாமெல்லோரும் வேலை செய்யாமலே 'ஜெ' ஆட்சியில் சுகம் பெறலாம்!

**தி**. மு. க.வும், ஜா. அணியும், ஜெ. அணியும், கிராமங்களில் இன்றைய தாய்க்குலத்தின் மிகப் பெரும் பிரச்னை ஆன மது விலக்கைப் பற்றிக் கண்டு கொள்ளவேயில்லை! ''காங்கிரஸ் சொல்கிறது என்று நம்பி விடாதீர்கள்! காங்கிரஸ் ஆளும் பிற மாநிலங்களில் அது அமுல் படுத்தப்படவில்லை!'' என்று தி. மு. க. குற்றம்சாட்டுகிறது! ஆனால் உண்மைக் காரணம் வேறு. சாராய லைசென்ஸ் மூலம் 'மாமூல்' பெறலாம் என்பதனால்தான் மது விலக்கைப் பற்றி 'மூச்'சில்லை! மேலும் இவர்களது இலவசத் திட்டங்கள் ஒன்றிரண்டையாவது நிறைவேற்றுவதெனில் அதற்கும் சாராயக் கடைதான் உதவும். ஆக, மக்களைக் கெடுத்து மக்களுக்கு நன்மை செய்வது போல் காட்டிக் கொள்வதுதான் இவர்கள் கொள்கை.

தேர்தல் அறிக்கை என்பது மிக முக்கியமான ஒரு கொள்கை — திட்ட அறிவிப்பு. இதை மிகக் கவனமாக — விவரமாக — சாத்தியக் கூறுகளை அலசி ஆராய்ந்து தயாரிக்க வேண்டும். காங்கிரஸ் ஒன்று தான் இதனை ஓரளவுக்கேனும் செய்திருக்கிறது. மற்றவை இதைக் காங்கிரஸ் எதிர்ப்புப் பிரசாரப் பீரங்கிகளாக எண்ணிக் கொண்டு, எதையெதையோ எழுதி இருக்கின்றன.

நினைவுகள் பசுமையாக இருக்கும் போது, எந்தவித தேர்தல் அறிக்கைகளும் மக்களை ஏமாற்றி விட முடியாது! பொருளாதார ஞானமில்லாத திட்டங்களையும், சாத்தியமில்லாத யோசனைகளையும் தாங்கி வந்திருக்கும் இந்தத் தேர்தல் அறிக்கைகளை மக்கள் சரியாகப் புரிந்து கொள்வார்கள்.

தேர்தல் அதிகாரி: ஏன்யா! உனக்கு போண்டா பிடிக்கும்ங்கிறதுக்காக வோட்டுச் சீட்டில் போண்டா சின்னத்தைத் தேடிக்கிட்டிருந்தா எப்படி? சீக்கிரம் வோட்டுப் போட்டுட்டு வாய்யா வெளியே...?''

— கரடிகுளம் ஜெயா பாரதிப்ரியா.





''அடேங்கப்பா... நான் இவ்வளவு பெரிய ஊர்வலத்தைப்பார்த்ததே இல்லே. இது எந்தக் கட்சி ஊர்வலம்?

''நீங்க ஒண்ணு. ஊர்வலம் இல்லீங்க! நம்ம தொகுதி வேட்பாளர்கள் எல்லாம் ஒரே நேரத்தில் வோட்டுக் கேட்டு வர்றாங்க; அவ்வளவுதான்!''

— கடுவை. கோபால்சாமி.



• சிவாஜி: புதுவகைப் பிரசாரம்.



• ஜெ.விடம் கொடுத்து ஏமாந்தார்!

# தேர்தல்: ஜூனியர் நியூஸ்

•• மதுரை மத்திய தொகுதியில் போட்டியிடும் — தமிழர் தேசிய இயக்கத்தின் தலைவரான — நெடுமாறன் மீன் சின்னம் பொறித்த மொட்டையான ஆட்டோ ரிக்ஷாவிலிருந்தபடியே பிரசாரம் பண்ணுகிறார். நகரின் நெரிசலான பகுதிகளில் நின்றபடி இலங்கை அரசியலைப் பேசும் ஒரே அரசியல்வாதி இவராகத்தான் இருக்க முடியும்!

•• ஆர்.எம். வீரப்பன் போட்டியிடும் புதுக்கோட்டைத் தொகுதியில் — இவரை எதிர்த்துச் சுயேச்சையாக இரு வீரப்பன்கள் நிற்கிறார்கள். இராம. வீரப்பன் இரட்டைப் புறாக்களுக்கு வாக்களிக்கச் சொல்ல, இன்னொரு வீரப்பன் குதிரைக்கு வாக்களிக்கச் சொல்ல, மற்றொரு வீரப்பன் சைக்கிளுக்கு வாக்களிக்கச் சொல்கிறார். 'வீரப்பனுக்கு ஓட்டளியுங்கள்' என்று சொல்லி மூன்று பேருமே வேறு வேறு சின்னங்களைப் பிரசாரம் செய்கிறார்கள். மக்கள் குழம்பாமல் இருப்பார்களா?

•• 'பூனைப்படை' என்பது முதலில் பிரதமர் ராஜீவிற்கு இருந்தது. அடுத்து ஜெயலலிதாவுக்கு இருந்தது. இப்போது ஆர். எம். வீ.க்கும் பூனைப்படை காவலாக வந்து விட்டது. கராத்தே பயின்ற 25 பேர் காவலாக — புதுக்கோட்டைத் தொகுதியில் நியமிக்கப்பட்டிருக்கிறார்கள். எப்படியோ 'பூனைகள்' அதிகப்பட்டுக் கொண்டிருக்கின்றன.

•• திருநாவுக்கரசு போட்டியிடுகிற அறந்தாங்கியில் அவர் மனுதாக்கல் செய்யப் போன போது — போகிற இடத்தில் தூக்குக் கயிறுகளும், தலைமுடிகளின் தோரணங்களும் (உதிர்ந்த ரோமம்?) கட்டித் தொங்கவிடப்பட்டிருக்க — அதைக் கடந்து போய் மனுதாக்கல் செய்து விட்டுத் திரும்பியிருக்கிறார் திருநாவுக்கரசு. என்ன இருந்தாலும் ரொம்பவும் ஞாபகப்படுத்தி இப்படியொரு தர்மசங்கடத்தையா ஏற்படுத்துவது திருநாவுக்கரசுக்கு?

•• த.மு.மு. தலைவரான சிவாஜி கணேசனின் பிரசாரமே தனியாகத்தானிருக்கிறது. பிரசார வேனிலிருந்தபடியே, "இந்தக் கட்டைக்கு 61 வயசாகிறது தாயே! இப்போதுதான் உங்ககிட்டே ஓட்டுக் கேட்டு வந்திருக்கேன். ஓட்டுப் போடுவீர்களா தாயே" என்று சிவாஜி கணேசன் பேசுவது, அவரது திருவையாறு தொகுதியில் நன்றாகத்தான் 'எடுபட்டுக் கொண்டிருக்கிறது.

•• ஜெயலலிதா — இப்போதைய தேர்தல் பிரசாரப் பயணங்களில் கறுப்புக் கோட்டுடன் ஏறத்தாழ ஒரு வக்கீலின் தோரணையில் — பிரசாரம் செய்கிறார். அதோடு, குழந்தைகளுக்கு கவுன், பெரியவர்களுக்கு சால்வை என்று வழங்குகிறார். சுற்றியிருக்கும் பூனைகளும் ஐந்து, பத்து ரூபாய் நோட்டுகளைக் கூட்டத்திற்கிடையில் வீசியெறிகிறார்கள்.

•• தேனிக்காரரான எம். எஸ். ஸ்ரீதரன் கட்சி ஆரம்பித்ததிலிருந்து கட்சித் தலைவி ஜெயலலிதாவுக்குக் கட்சி நிதியைத் தாராளமாகக் கொடுத்துக் கொண்டே இருந்தார். தேர்தல் நெருங்கினவுடன் வீடு நிலங்களையெல்லாம் விற்றுத் தேனியில் தமக்குக் கட்சி சார்பில் போட்டியிட சீட் கிடைக்குமென்று நம்பி லட்சக்கணக்கான பணத்தை ஜெயலலிதாவிடம் கொடுத்திருக்கிறார். கொடுத்து விட்டு சீட் எதிர்பார்த்திருந்தவருக்கு சீட் கிடைக்கவில்லை. ஜெ. விடம் பணத்தைக் கொடுத்த போது எடுத்த புகைப்படத்தை வைத்துக் கொண்டு புலம்பிப் போய் விட்டார். கூடவே தேனியில் சுயேச்சையாக நிற்கவும் செய்து, தற்போது — ஜானகி அணி சார்பானராக வாபஸ் வாங்கியிருக்கும் ஸ்ரீதர் "இதே மாதிரி ஜெயலலிதாவால் பாதிக்கப்பட்டவர்களின் பெரிய லிஸ்ட்டே தம்மிடம் இருக்கிறது என்கிறார்.

— வியோ

படங்கள்: மூ. ஜெ.



* ஜெயலலிதா: கௌரவப் பிரச்னை!



* ஜானகி: ''மவராசன் பெண்சாதி''



* நிர்மலா: சரிவான போட்டி?



குமரி அனந்தன்: கடும் எதிர்ப்பு!



* பி. எச். பாண்டியன்: இன்று நிலைமை வேறு!



* லட்சுமி, தனலட்சுமி, வேலம்மாள், மலர்விழி: ''எம்.ஜி.ஆருக்குப் பிறகு ஜானகியம்மாதாங்க...''

# தெற்குப் பகுதிகளில் தேர்தல் நிலவரங்கள்...

## எம்.ஜி.ஆருக்குப் பிறகு ஜானகியா?

"சென்ற தேர்தல் மாதிரி சாவுக்கு ஒரு வோட்டு; நோவுக்கு ஒரு வோட்டு என்று இப்போது யாரும் வோட்டுப் போட மாட்டார்கள். அதனால் எங்களுக்குத்தான் வெற்றி வாய்ப்பு அதிகம்'' என்று ஆண்டிப்பட்டியில் தி.மு.க.வினரைச் சந்தித்த போது சொன்னார்கள்.

எம்.ஜி.ஆர்., கடந்த தேர்தலில் அமெரிக்க ஆஸ்பத்திரியில் படுத்துக் கொண்டே வெற்றி பெற்ற தொகுதி ஆண்டிப்பட்டி. இப்போது அவருடைய மனைவி திருமதி ஜானகி அங்கு போட்டி யிடுகிறார். இவரை எதிர்த்து தி. மு. க. சார்பில் அதன் ஒன்றியச் செயலாளரான பி. ஆசையனும், ஜெ. அணி சார்பில் பன்னீர் செல்வமும் இ. காங்கிரஸ் சார்பில் கே. வேலுச்சாமியும் களத்தில் இருக்

கின்றனர்.

இ. காங்கிரஸைப் பொறுத்தவரை இதுவரை ஆண்டிப்பட்டித் தொகுதியில் தனது கூட்டணிக் கட்சி வேட்பாளர்களை ஆதரித்திருக்கிறதே தவிர, தனது சொந்த வேட்பாளரை நிறுத்திப் பார்த்ததில்லை என்பதால், இ. காங்கிரஸ்காரர்களுக்கே தொகுதி நிலவரம் சரிவரப் பிடிபடாமல் இருக்கிறது என்பதுதான் உண்மை.

மேலும் ஆண்டிப்பட்டி தொகுதியில் எம்.ஜி.ஆர். வெற்றி பெற்ற பிறகு சுமார் நூறு கோடி ரூபாய் அளவுக்குச் செலவு செய்யப்பட்டிருப்பதால் (அதில் எத்தனை சதம் மக்களைச் சேர்ந்திருக்கும் என்பது போன்ற அபத்தமான கேள்விகளெல்லாம் கூடாது சார்!) தொகுதி மக்களிடம் எம்.ஜி.ஆர். மேல் ஒருவித பக்தியே இருக்கிறது. பெரும்பாலும் இத்தொகுதி மக்கள் பாமரர்களே என்பதால் சத்துணவுத் திட்டம் மிகுந்த மதிப்பைப் பெற்றிருக்கிறது.

''பசியால் வாடின எங்க புள்ளைங்களுக்குச் சோறு போட்ட அந்த மவராசன் பொண்சாதி ஜானகி மகராசிக்குத் தாங்க என் ஓட்டு...'' என்றார் தொகுதியைச் சேர்ந்த லட்சுமி என்ற பெண்மணி. தனலட்சுமி, வேலம்மாள், மலர் விழி போன்ற பெண்களைச் சந்தித்த போதும் தங்கள் வோட்டு ஜானகிக்கே என்றார்கள்.

ஆக, ஆண்டிப்பட்டியில் திருமதி ஜானகிக்கே அதிக வாய்ப்புகள் என்றாலும் இரட்டை இலைச் சின்னம் மாறி, இரட்டைப் புறாச் சின்னம் என்றாகி விட்டதால் இந்த மாறாட்டம் சில பாமர மக்களைக் குழப்பக் கூடும்!

## ஜெயலலிதா தொகுதியில் கடும் போட்டி....

கடந்த தேர்தல்களிலெல்லாம் பத்தோடு பதினொன்றாகக் கருதப்பட்ட போடி (நாயக்கனூர்) தொகுதி இப்போது ஜெயலலிதாவும் நிர்மலாவும் தேர்தல் களத்தில் மோதிக் கொள்வதால் மிகுந்த பரபரப்பான தொகுதியாகி விட்டது.

இவர்களை எதிர்த்து இ. காங். வேட்பாளராக கே. எஸ். எம். ராமச்சந்திரனும் தி.மு.க. வேட்பாளராகப் போடி நகர சபைத் தலைவர் முத்து மனோகரனும் களத்தில் குதித்திருக்கிறார்கள். இவர்களில் கே. எஸ். எம். ராமச்சந்திரன் கடந்த தேர்தலில் அ. தி. மு. க. கூட்டணியோடு முத்து மனோகரனை எதிர்த்து நின்று வெற்றி பெற்றவர். தற்போதும் அவர் மிகுந்த நம்பிக்கையோடு இருக்கிறார்!

நாம் சந்தித்த போது, ''சினிமாக் கவர்ச்சி என்பதெல்லாம் எம்.ஜி.ஆரோடு போய் விட்டது; இனி அது எடுபடாது. மக்கள் ஒரு நிலையான அரசை விரும்புகிறார்கள். எனவே எனக்குத்தான் வெற்றி வாய்ப்பு பிரகாசமாக உள்ளது'' என்றார் ராமச்சந்திரன்.

தி.மு.க. வேட்பாளர் முத்து மனோகரன் நிலை எப்படி? சென்றமுறை அவர் போட்டியிட்டுத் தோல்வியடைந்த அனுதாபம் என்பது அவர் நகர சபைத் தலைவரானவுடனேயே போய் விட்டது. காரணம், அவர் நகர சபைத் தலைவரான சில காலத்திற்குள்ளாகவே பல்வேறு ஊழல் குற்றச்சாட்டுகளுக்கு ஆளாகி விட்டார் என்று சொல்கிறார்கள்.

ஆக, காங்கிரஸ் வேட்பாளர் எத்தனை தன்னம்பிக்கையோடு இருந்தாலும் நிஜமான போட்டி என்பது இப்போது ஜெயலலிதாவுக்கும் நிர்மலாவுக்கும்தான் என்பதே நிலை. இது நிர்மலாவை விட ஜெயலலிதாவுக்கு ஓர் அரசியல் வாழ்வுப் பிரச்னை என்பதால் அவர் அணியினர் மிகவும் பரபரப்போடு செயல்படுகின்றனர். அதே போல்தான் நிர்மலா சார்ந்திருக்கும் ஜா. அணியினரும். ஜெயலலிதா பல்வேறு தொகுதிகளைக் கவனிக்க வேண்டியிருக்க, நிர்மலா இங்கேயே தங்கியிருந்து பிரசாரம் செய்கிறார். கூடவே, எப்படியாவது ஜெ. தோற்க வேண்டும் என்கிற எண்ணம், தாங்கள் ஜெயிக்க வேண்டும் என்பதை விட அதிகமாகத் தி. மு. க. மற்றும் காங்கிரஸ்காரர்களிடமும் இருப்பதாகத் தெரிகிறது. இந் நிலையில்— அதாவது ஓர் இக்கட்டான நிலையில்தான் ஜெயலலிதாவின் வெற்றி வாய்ப்பு இருப்பதாகப் படுகிறது!

## அருணாசலத்திற்கு எதிராக இந்து முன்னணி....

இ. காங்கிரஸ் வேட்பாளராக மத்தியத் தொழில் துறை இணையமைச்சர் அருணாசலம் போட்டியிடும் இராஜபாளையம் தொகுதி, நாம் சென்ற போது, தேர்தல் பரபரப்பே இல்லாமல் இருந்தது! தி.மு.க. சார்பில் வி. பி. இராசனும், ஜெ. அணி சார்பில் தனுஷ்கோடியும் ஜா. அணி ஆதரவில் த. மு. மு. சார்பில் சண்முகவேலும் அமைச்சரை எதிர்த்துக் களத்தில் குதித்திருக்கிறார்கள்.

நிலைமை எப்படி?

''நான் இதே தொகுதியைச் சேர்ந்தவன். இங்கு ஏராளமான நூல் ஆலைகளும் தொழிற் கூடங்களும் உள்ளதால் தொழிலாளர்கள் அதிகம். அவர்களுக்காக நான் பல போராட்டங்களில் கலந்து கொண்டு சிறை சென்றிருப்பதால் அவர்களின் ஆதரவு முழுக்க முழுக்க எனக்குத்தான். மேலும் அமைச்சர் அருணாசலம் வேறு தொகுதி (தென்காசி)க்காரர் என்பதால் மற்றவர்களின் ஆதரவும் உள்ளூர்க்காரனான எனக்குத்தான்...'' என்றார் தி.மு.க. வேட்பாளர் வி. பி. இராசன். மேலும், ''நான்

ஜனங்களை நம்பியே நிற்கிறேன்; பணத்தை நம்பி அல்ல...!'' என்றார் அவர்.

ஜெ. அணி வேட்பாளரும் சரி, த.மு.மு. வேட்பாளரும் சரி, சிறிதும் நம்பிக்கையற்றவர்கள் போல்தான் தங்கள் தேர்தல் பணிகளைக் கவனித்துக் கொண்டிருப்பது போல் தெரிகிறது. இந் நிலையில் போட்டி காங்கிரஸுக்கும் தி.மு.க.வுக்கும்தான் என்றாகி விட்டது.

அமைச்சர் அருணாசலத்தோடு சில கிராமங்களுக்குச் சென்று பார்த்தோம். அமைச்சர் என்ற பந்தா சிறிதும் இல்லாததாலோ என்னவோ, மக்கள் அவரைப் பல இடங்களிலும் சிறப்பான முறையில் வரவேற்று உபசரிப்பதைக் காண முடிந்தது. மேலும் ஏ. ஏ. சுப்ப ராஜா என்ற உள்ளூர்க் காங்கிரஸ் பிரமுகரும் அருணாசலத்தின் வெற்றிக்குத் தீவிரமாக உழைப்பதால் (அதிசயமாக இங்கு கோஷ்டி சண்டை இல்லை!) அமைச்சருக்கே வெற்றி வாய்ப்பு பிரகாசமாக இருப்பது போல் தெரிகிறது.

இருப்பினும் இத் தொகுதியிலுள்ள இந்து முன்னணிக்காரர்கள் 'இந்து பெயரில் உள்ள கிறிஸ்துவரையும் (அருணாசலம்) இந்து விரோத நாத்திகவாதிகளையும் (தி.மு.க. வேட்பாளர்) தோற்கடிப்போம்' என்று போர்டு எழுதி வைத்திருப்பதோடு, துண்டுப் பிரசுரங்களையும் அச்சடித்து விநியோகித்து வருகிறார்கள்.

ஏன் இப்படி? ''அமைச்சர் அருணாசலம் அவரது தொகுதியான தென் காசிப் பகுதியில் இந்து இயக்கங்களை வளர விடக் கூடாது என்று தீவிரமாக வேலை பார்த்தவர். இங்கும் வெற்றி பெற்றால் அதைத்தான் செய்வார். எனவே அருணாசலத்தையும், தி. மு. க. வேட்பாளரையும் தோற்கடிக்கப் பாடுபடுவோம்...'' என்றார்கள் இந்து முன்னணியினர்.

இருப்பினும் இதையெல்லாம் கடந்து அருணாசலம் வெற்றி பெற்று விடுவார் என்றே பலரும் சொல்கிறார்கள்.

## குமரி அனந்தனுக்குக் கடும் எதிர்ப்பு!

கடந்த இரண்டு தேர்தல்களிலும் அ. தி. மு. க. ஆதரவோடு முன்பு தாம் தலைவராக இருந்த கா.கா.தே.க. வேட்பாளரே வெற்றி பெற்றார் என்பதால், அந்த ஆசையில் இப்போது தாம் வெற்றி பெற்று விடலாம் என்று, இ. காங்கிரஸ் சார்பில் குமரி அனந்தன் போட்டியிடுகிறார், சாத்தான் குளம் தொகுதியில்!

கடந்த தேர்தலில் ராதாபுரம் தொகுதியில் வெற்றி பெற்ற குமரி அனந்தன் இப்போது அங்கு போட்டியிடாததற்குக் காரணம், வெற்றி பெற்ற பிறகு அந்தத் தொகுதிப் பக்கமே குமரி அனந்தன் தலை வைத்துக் கூடப் படுக்காததுதான்! (ராதாபுரம் குறைகள் பற்றி முன்பு கல்கியில் நாமே விரிவாக வெளியிட்டிருக்கிறோம்!) அதனால்தான் இம்முறை சாத்தான் குளம் தொகுதிக்கு உள்ளூர்க் காங்கிரஸ்காரரான ஜெயசிங் என்பவர் டிக்கெட் கேட்ட நிலையிலும் குமரி அனந்தன் அடம்பிடித்து இத் தொகுதியில் தமக்கு டிக்கெட் வாங்கியிருக்கிறார்!

குமரி அனந்தனை நிறுத்தப் போவதாகத் தெரிய வந்த போதே 'தயவு செய்து உள்ளூர்க்காரர் ஒருவரை நிறுத்துங்கள்' என்று மூப்பனாருக்கு ஏராளமான தந்திகளை அனுப்பியிருக்கிறார்கள் பலரும். இருப்பினும் கட்சி செவிசாய்க்கவில்லை.

இதன் காரணமாக உள்ளூர்க் காங்கிரஸ்காரர்களில் ஒரு பிரிவினர் ஜெயசிங்கை சுயேட்சையாகப் போட்டியிடச் செய்துள்ளார்கள். இவருக்கு ஆதரவாக ஜெ. அணி, விஜயராகவனுடைய ஜனதா, இந்திய கம்யூனிஸ்ட் கட்சி ஆகியவையும் செயல்படுகின்றன!

இவரோடு, தி. மு. க. சார்பில் துரைராஜ் என்பவரும், ஜா. அணி சார்பில் எஸ். ஆர். சுப்பிரமணிய ஆதித்தனும் களத்தில் குதித்திருக்கிறார்கள்.

தி. மு. க. வேட்பாளர் துரைராஜ் இப்போதே தாம் எம்.எல்.ஏ. ஆகி விட்டது போன்ற 'பந்தா'வோடு வலம் வருவதால், மக்களிடம் பரவலானதொரு வெறுப்பை

துரைராஜ்:
இப்போதே பந்தா!





கே.கே.எஸ்.எஸ்.ஆர்:
மிரட்டல்கள் பலிக்குமா?

அருணாசலம்: நல்ல வரவேற்பு.



அமர்நாத்
பிரபாகர்:
பாண்டியனுடன்
மோதுகிறார்.



# பானி மிக்ஸ்

## உடனடியாகத் தயாரிக்கக்கூடிய பாரிட்ஜ்.

## தானியங்கள், பழங்கள், முந்திரி கலந்த ஆகாரம்.

பானி மிக்ஸ் கோதுமை, சோளம், அரிசி, தேங்காய், ஆப்பிள், பேரிச்சை, திராட்சை மற்றும் முந்திரி போன்ற வையிலான ஊட்டமிகு, எளிதில் ஜீரணிக்கக்கூடிய பாரிட்ஜ் ஆகாரம். குடும்பத்தினருக்கு காலைச் சிற்றுண்டிக்கும் மாலையில் பள்ளி அல்லது அலுவலக வேலைகளுக்குப் பின் அளிக்கவும் உகந்தது. முதியோருக்கும் நோயிலிருந்து குணம் அடைவோர்க்கும் ஏற்ற உணவு.




**நிமிடங்களில் தயார்**

பானி மிக்ஸை விரைவாகவும், எளிதாகவும் தயாரிக்கலாம்.




கிண்ணத்தில் தேவையான பானி மிக்ஸை எடுக்கவும்.




அதோடு முன்னமே கொதித்த பாலை போதுமான அளவு மெதுவாகச் சேர்க்கவும்.




மிருதுவான கிரீம் போன்ற பாரிட்ஜ் ஆகாரம் பெற மெதுவாகக் கலக்கவும்.




சுவையான ஒவ்வொரு ஸ்பூன் பாரிட்ஜ் உணவையும் உங்கள் குடும்பத்தினர் சுவைத்து மகிழ்வார்கள்.

**பானி மிக்ஸ்**

இந்தியாவிலேயே முதன் முறையாக!




வழங்குவோர்: க்ளிண்டியா லிமிடெட் (முன்னாள் க்ளாக்ஸோ)

குடும்ப உணவுகளில் நம்பிக்கைக்கு உகந்த பெயர்

GL/2/88 TAM



# சுவைத்து மகிழ்ந்து வளர்ச்சி அடைந்திடும் வழி–:.பாரெக்ஸ்®

| குழந்தையின் உயரம் மற்றும்* எடையை சோதித்திடுங்கள் | ஆண் குழந்தை | | பெண் குழந்தை | |
|---|---|---|---|---|
| | எடை (கிலோ) | உயரம் (செ.மீ.) | எடை (கிலோ) | உயரம் (செ.மீ.) |
| *3* மாதம் | 5.2 | 59.1 | 4.9 | 58.4 |
| *6* மாதம் | 6.7 | 64.7 | 6.1 | 63.7 |
| *9* மாதம் | 7.3 | 68.2 | 6.9 | 67.0 |
| *12* மாதம் | 8.4 | 73.9 | 7.8 | 72.5 |

*இது இந்தியக் குழந்தை மருத்துவ ஆராய்ச்சிக் கழகத்தால் வழங்கப்பட்டது.

இது இந்தியக் குழந்தைகளுக்கு மட்டுமே சராசரியாகும். குழந்தையின் வளர்ச்சி உங்கள் டாக்டரின் திருப்திக்கேற்ற வகையில் இருந்தால் போதும்.

வண்ணமய பாப்பா—
பராமரிப்பு வழிகாட்டி
இலவசமாய் பெற்றிட இதை
அனுப்புங்கள் இங்கே:
க்ளிண்டியா லிமிடெட்
(FPD/51) டாக்டர் அன்னி
பெஸண்ட் ரோட், ஓர்லி,
பம்பாய்-400 025..




உங்கள் குழந்தை பரிபூரண அபிவிருத்தியும் வளர்ச்சியும் அடைந்திட போஷாக்கு நிறைந்த :.பாரெக்ஸ் அளியுங்கள்.

**:.பாரெக்ஸ்®**

சுவைத்து மகிழ்ந்து வளர்ச்சி அடைந்திடும் வழி

26/203

இப்போதே சம்பாதித்துக் கொண்டிருக்கிறார்.

இந்நிலையில் ஜா. அணி வேட்பாளரான எஸ். ஆர். சுப்பிரமணிய ஆதித்தனுக்கே பிரகாசமான வாய்ப்பிருப்பதாகச் சொல்கிறார்கள். எது எப்படியிருப்பினும், சாத்தான் குளம் தொகுதியைப் பொறுத்த வரை பலரும் குமரி அனந்தன் வெற்றி பெறக் கூடாது என்பதில் தெளிவாக இருக்கிறார்கள் என்றே தெரிகிறது!

## பாண்டியனுக்கு வந்த சோதனை!

கடந்த மூன்று முறை தொடர்ந்து சேரன் மகாதேவியில் வெற்றிக் கொடி நாட்டி வந்த சபாநாயகர் பி. எச். பாண்டியன் இம்முறையும் போட்டியிடுகிறார். தொகுதி மக்களிடம் பரவலானதொரு செல்வாக்கைக் கட்சி பேதமின்றிப் பெற்றவர் பி. எச். பாண்டியன் என்றாலும் இப்போதைய நிலை கொஞ்சம் வேறு.

இவரை எதிர்த்து ஜெ. அணி சார்பில் போட்டியிடும் அமர்நாத் பிரபாகர் (சொக்கலால் பீடி அதிபர்) முன்பு பாண்டியனின் வெற்றிக்காகக் கடுமையாக உழைத்தவர்! இப்போது கட்சி உடைந்ததால் எதிரணியில் இருக்கிறார். அவரோடு முன்பு பாண்டியனின் வெற்றிக்குப் பாடுபட்ட பலரும் போய் விட்டதாகச் சொல்லப்படுகிறது. இது பாண்டியனுக்குள்ள முதல் மைனஸ் பாயிண்ட்.

இரண்டாவது, ஹரிஜன இளைஞர்களில் இருவர் பாண்டியனை எதிர்த்துச் சுயேட்சையாகப் போட்டியிடுவது. இது ஹரிஜனங்களுக்குப் பாண்டியன் மேல் ஏற்பட்டுள்ள அதிருப்தியின் வெளிப்பாடுதான் என்று சொல்லப்படுகிறது.

பாண்டியனுக்கு உள்ள மூன்றாவது மைனஸ் பாயிண்ட், தி. மு. க. வேட்பாளரான இரா. ஆவுடையப்பனும் காங்கிரஸ் வேட்பாளரான பி. வேல் துரையும் மிகுந்த உற்சாகத்தோடு சளைக்காமல் தத்தமது வெற்றிக்குப் பாடுபட்டு வருவதாகும்.

ஆக, இத்தனை காலமும் பாண்டியனின் கோட்டை என்று வர்ணிக்கப்பட்ட சேரன் மகாதேவி இப்போது என்ன செய்யும்? நிச்சயமாகப் போட்டி கடுமையானதுதான்— பாண்டியனே இப்போதும் வெற்றி பெற்றால் கூடக் கடந்த தேர்தலைப் போல் முப்பதாயிரம் வாக்கு வித்தியாசத்தில் வெற்றி பெற முடியாது — இழுத்துப் பிடித்துக் கொண்டுதான் வெற்றி பெற முடியும் என்கிறார்கள்!

## சிக்கித் திணறுகிறார் கே. கே. எஸ். எஸ். ஆர்.

விளாத்திகுளம் தொகுதியில் ஜெ. அணி சார்பில் போட்டியிடும் கே. கே. எஸ். எஸ். ஆர். ராமச்சந்திரன் கடுமையான எதிர்ப்புகளில் சிக்கிக் கொண்டிருக்கிறார்!



அவன்: தலைவர்தானே பிரசாரத்துக்கு நடிகை வேணும்னு சொன்னார்! இப்ப ஏன் கோபப்படறார்?

இவன்: பின்னே என்னய்யா, நீ பேபி ஷாலினியை அழைச்சுக்கிட்டு வந்திருக்கியே!

— ஏ. கே.

ஆம்; ஜா. அணி சார்பில் போட்டியிடும் எம். தெய்வேந்திரன், கடந்த தேர்தலில் அ.தி.மு.க. — இ. காங். கூட்டணியில் டிக்கெட் கிடைக்காமல் சுயேட்சையாக நின்றே இருபதாயிரம் வாக்குகள் பெற்றவர். இப்போது ஜா. அணி சார்பு என்பதால் அவருக்கான ஆதரவு அதிகமாகிறது!

அடுத்து, தி.மு.க. வேட்பாளரான குமர குருபர ராமநாதன் சென்ற முறையே அ.தி.மு.க. — இ. காங். கூட்டணி வேட்பாளரை எதிர்த்துப் போட்டியிட்டு வெற்றி பெற்றவர். இப்போது எம்.ஜி.ஆர். இல்லை என்கிற நிலையில் அவருடைய செல்வாக்கும் அதிகமாகாமலிருக்குமா என்கிறார்கள்.

இ. காங்கிரஸ் சார்பில் போட்டியிடும் சுப்பா ரெட்டியார் மறைமுகமாகக் கே. கே. எஸ். எஸ். ஆருக்குத்தான் தம் ஆதரவைத் தந்திருக்கிறார் — தமது வெற்றி பற்றிக் கவலைப்படவில்லையென்று சொல்லப்பட்டாலும் அது கே. கே. எஸ். எஸ். ஆரைக் காப்பாற்ற முடியாது என்றே சொல்கிறார்கள்.

காரணம், ராமச்சந்திராபுரத்தில் ரெட்டியார் இனத்தவருக்கும் கோனார்களுக்கும் ஏற்பட்ட கலவரத்திற்குக் கே. கே. எஸ். எஸ். ஆர்தான் காரணம் என்று கருதப்படுவதால் ரெட்டியார் வாக்குகள் கிடைத்தாலும் கோனார் வாக்குகள் அவருக்குக் கிடைக்காது என்கிறார்கள். மேலும், கே. கே. எஸ். எஸ். ஆர். கோஷ்டியினர் வேலாத் தேவர் என்பவரை விருதுநகரில் வெட்டியதால் தேவர் இன வாக்குகளும் கிடைக்காது என்கிறார்கள்.

இவற்றோடு வேட்பு மனுத்தாக்கல் செய்ய வந்த ஜா. அணி வேட்பாளர் தெய்வேந்திரனின் காரை வழிமறித்துக் கே. கே. எஸ். எஸ். ஆர். கோஷ்டியினர் பயமுறுத்தி வேட்பு மனுத் தாக்கல் செய்யக் கூடாதென்று தடுக்க முயன்ற நிகழ்ச்சியும் அவருக்கு எதிராக இருப்பதாகச் சொல்லப்படுகிறது.

கட்டுரை: **பானு மணாளன்.**

படங்கள்: **சுபா, பானுமணாளன்**


சுப்ரமண்யம் சுவாமி




முதல்வர் பதவி
இ.காங்கிரஸ் அல்லது தி.மு.க.வுக்கு வோட் போட்டு ஏதோ ஒன்று நிலையான அரசு அமைக்கட்டும். எல்லோருக்கும் வோட் போட்டு என் மானத்தை வாங்காதீர்கள்!


கேட்டீங்களா எனக்கு ஆதரவா பேசுறார்!
இல்லவே இல்லை! எனக்குத் தான் ஆதரவா பேசுறார்!


தெலுங்கு தேசம் கட்சிக்கு
சைக்கிள் சின்னத்தில் வோட் அளியுங்கள்


இந்த சைதன்ய ரதத்திலேயே போய் தமிழ் நாட்டுல பிரசா ரம் செய்து தி.மு.க.வுக்கு வோட் குவிய வைக்கிறேன்!
ஐ.ஏ.எஸ். அதிகாரிகள்
போலீஸ் அதிகாரிகள்




# கல்கி

1989 ஜனவரி 22
மலர் 47 இதழ் 25
விபவ தை 9




# காங்கிரஸ் Vs தி. மு. க.

"சிவகங்கை சின்னப் பையன்" என்று ப. சிதம்பரம் வர்ணிக்கப்பட்டதைவிட மோசமான வர்ணனை ஒன்று உண்டென்றால் அது, "கருணாநிதி கறுப்புக் கண்ணாடி அணிந்திருக்கிறார் அதனால் அவரால் எதிலும் சரியான பார்வையைச் செலுத்த முடியவில்லை" என்பதுதான். 'கறுப்புக் கண்ணாடி அணியாத பிரதமரின் பொருளாதாரக் கண்ணோட்டம் அஷ்ட கோணலாக இருக்கிறதே' என்று திருப்பிக் கேட்க அதிக நேரமாகி விடாது. மேலும், விஜயவாடா கலவரங்களைச் சுட்டிக் காட்டி, 'தி. மு. க. பதவிக்கு வந்தால் தமிழகத்திலும் அப்படி நடக்கும்' என்று பயமுறுத்துவதும், 'அரை அம்சத் திட்டம்' என்று கேலி செய்வதும் ஒரு நாட்டின் பிரதமர் பேசக் கூடிய பேச்சுக்கள் அல்ல. இருப்பினும் தேர்தல் சூடுபிடிக்கப் பிடிக்க உணர்ச்சிகளின் பிடியில் தலைவர்கள் சிக்குவதும் வார்த்தைகள் தடிப்பதும் இயல்பு என்று கருதி ஒதுக்கி விட்டுக் காங்கிரஸின் தேர்தல் அறிக்கையைக் கவனித்தால், அதில் பல நல்ல அம்சங்கள் இருப்பதைக் காணலாம். அறிக்கையில் கண்டுள்ளவற்றை முழுமையாக அல்ல, முக்கியமானவற்றை நிறைவேற்றினாலே கூடத் தமிழகம் வளம் பெறும். அதே போல தி. மு. க. வின் தேர்தல் அறிக்கையிலும் சில குறைகள் இருந்தாலும் நிறைகள் மிகுதி என்பதை மறுப்பதற்கில்லை. முக்கியமாக, 'தமிழகத்தின் அபிவிருத்திக்கு உத்தேசிக்கப்பட்டுள்ள தி. மு. க.வின் திட்டங்கள், தமிழக அரசின் வருவாய் சாத்தியக் கூறுகளை மனத்தில் கொண்டே வரையப்பட்டுள்ளன' என்று கருணாநிதி உறுதி அளித்திருப்பது பாராட்டுக்குரியது. என்ன வித்தியாசமென்றால், காங்கிரஸ் தேசிய நலனுக்கு முக்கியத்துவம் தந்து மாநில நலன்களைக் கவனிக்கும்; தி. மு. க. மாநில நலன்களுக்கு முதலிடம் தந்து தேச நலனைக் கருதும். ஆக மொத்தம், இந்தத் தேர்தல் தி. மு. க.வுக்கும் காங்கிரஸுக்கும் இடையில் நடக்கும் ஒரு பலப் பரீட்சையே என்று இருதரப்பிலும் கூறப்படுவதை வாக்காளர்கள் அப்படியே ஏற்றுக் கொண்டு அதற்கேற்பச் செயல்படுவது அவசியம்.

ஜெயலலிதாவின் தொண்டர்களே அவரால் ஏமாற்றப்படுவதையும் அவருடைய கறுப்புப் பூனைகள் அவருடைய தொண்டர்களையே அடித்து நொறுக்குவதையும் பார்க்கும் போது; அவருடைய "எல்லாம் இலவசம்" வாக்குறுதிகளையும் கவனிக்கும் போது, அவர் எதேச்சாதிகார மனப்பான்மைக்கு நூற்றுக்கு நூறு மார்க் பெறுகிறார்; பொருளாதார அறிவில் சைபர் மார்க் பெறுகிறார். இத்தகைய ஒருவர் ஆட்சிக்கு வர நேர்ந்தால் தமிழகத்தின் கதி என்ன? அதோ கதிதான் — சந்தேகமில்லை. ஜானகி — சிவாஜி கூட்டணி பற்றிக் கூறுவதற்கே ஒன்றுமில்லை. எனவே தமிழக மக்கள், கவர்ச்சி அரசியலுக்கும் அனுதாப அரசியலுக்கும் அடிமைப்படாமல், நிலையான ஆட்சியை உருவாக்குவதுடன், வலுவான ஓர் எதிர்க்கட்சியைச் சட்டசபைக்கு அனுப்பித் தமிழகத்தின் எதிர்காலத்தைச் சிறக்கச் செய்ய வேண்டும்.

ஆட்சிக்கு வர வேண்டும் என்ற நோக்கத்துடன்தான் தேர்தல் களத்தில் இறங்க வேண்டும். ஆனால் ஆட்சியைப் பிடிக்க முடியாமல் போய்ப் பிரதான எதிர்க் கட்சியாக விளங்க நேர்வது ஜனநாயகத்தில் அவமானமே அல்ல. ஏனெனில், ஆட்சியில் அமரும் கட்சியை விட எதிர்க் கட்சிக்குத்தான் பொறுப்பு அதிகம்; ஆட்சியைக் கண்காணிக்கும் வேலை மிகுதி. எனவே, பணம் சுருட்ட வேண்டும் என்ற எண்ணம் இல்லாதவரை, வெற்றிக்கு மகிழ்வது போலவே சக்தி வாய்ந்த எதிர்க் கட்சியாகச் சட்டசபைக்குள் புகுவதற்கும் பெருமிதமும் சந்தோஷமும் அடையலாம்.

இந்த இடத்தில்தான் வாக்காளரின் விவேகம் நன்கு செயல்பட வேண்டும். ஒரு கட்சியை நிலையான ஆட்சி அமைக்க அனுமதித்து, மற்றொரு கட்சியைப் பலமான எதிர்க் கட்சியாக அமைய அவர்கள் வழிவகுக்க வேண்டும். அவ்வாறின்றி எந்தக் கட்சியுமே நிலையான ஆட்சி அமைக்க முடியாத குழப்ப நிலைக்கும் கூட்டணி பேரத்துக்கும் வாக்காளர்கள் இடம் அளித்தார்களென்றால் அவர்கள் தங்கள் கடமையில் தவறியவராவார்கள். சில்லறைக் கட்சிகள் பால் கவனத்தைச் சிதற விட்ட குற்றத்தைப் புரிந்தவர்களாவார்கள். அரசியல்வாதிகளின் கடமைகளைப் பற்றி அடிக்கடி அலசும் வாக்காளர்கள், இன்று தங்கள் ஜனநாயகக் கடமையைச் செவ்வனே நிறைவேற்றட்டும்.

---

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. — பாரதியார்.

# சொந்த மாவட்டங்கள் கை கொடுக்குமா?



வலம்புரி ஜான்:
ஏன் நிற்கிறார்?



மூப்பனார்:
கலபமல்ல...



வீரப்பன்:
கடும் போட்டி!



பெரியண்ணன்:
சரியான போட்டி!

**சிவாஜிக்குச் சில சங்கடங்கள்...**

தமிழக முன்னேற்ற முன்னணியின் தலைவர் சிவாஜி கணேசன் போட்டியிடும் திருவையாறு தொகுதியில் சிவாஜியை எதிர்த்து, காங்கிரஸ் சார்பாக ஆறுமுக கொன்ன முண்டாரும், இ.மு.க. சார்பாகத் துரை சந்திரசேகரும், ஜெ அணி சார்பாக ஆழி. கோ. மருதையனும் போட்டியிடுகிறார்கள். கிட்டத்தட்ட ஒரு லட்சத்து இருபத்தைந்தாயிரம் வாக்காளர்கள் உள்ள இந்தத் தொகுதியில் பாதிக்கு மேற்பட்டோர் முக்குலத்தோர் இனத்தைச் சார்ந்தவர்களும் ஹரிஜனங்களும்தான். சிவாஜி முக்குலத்தோர் பிரிவைச் சேர்ந்தவர் என்பது குறிப்பிடத்தக்கது என்பதால் அவர்கள் வோட்டு அப்படியே சிவாஜிக்குக் கிடைக்கலாம் என்று சொல்லப்படுகிறது.

காங்கிரஸ் வேட்பாளர் ஆறுமுககொன்ன முண்டார் (வயது 62) நெடுங்காலம் தாலுகா காங்கிரஸ் தலைவராகவும், திருவையாறு பஞ்சாயத்து யூனியன் உதவித் தலைவராகவும் பஞ்சாயத்துத் தலைவராகவும் இருந்தவர். இப்போதுதான் முதல் முறையாகச் சட்டமன்றத்திற்குப் போட்டியிடுகிறார். தொகுதியில் இவருக்குப் பரவலாக நல்ல பெயர் இருக்கிறது. மேலும் ராஜீவ் காந்தி இந்தத் தொகுதிக்கு வந்து சென்றிருக்கிறார்.

தேர்தல் வேலைகளை மும்முரமாகப் பார்த்துக் கொண்டிருந்த காங்கிரஸ் தொண்டர் ஆறுமுகத்தை மடக்கி, "காங்கிரஸ் வேட்பாளர் எப்படி வெற்றி பெறப் போகிறார்?" என்றதும், மழையாகப் பொழிந்தார்: "கிராமப்புறங்களில் எங்கள் கட்சி திட்டமிட்டு வேலை செய்கிறது. பூத் கமிட்டி போட்டிருக்கிறோம். எல்லாம் இளைஞர்கள். திட்டமிட்டு வேலை செய்கிறோம். சிவாஜி பக்கத்து ஊர்க்காரர்தான் என்றாலும் இந்தத் தொகுதியைச் சேர்ந்தவரல்ல. ஆனால் எங்கள் வேட்பாளர் மக்களுக்கு நன்கு அறிமுகமான உள்ளூர்க்காரர். மேலும் 1971 தேர்தலில் சிவாஜிக்கு வேண்டிய பழனி என்பவர் இந்தத் தொகுதியில் காங்கிரஸ் சார்பாகப் போட்டியிட்டார். சிவாஜி கிராமம் கிராமமாகச் சுற்றி வாக்குக் கேட்டார்.

ஆனால் அந்தப் பழனி தோற்றுப் போனார். அதே நிலைதான் இன்றைக்கும் சிவாஜிக்கு இருக்கிறது. எனவே, எங்கள் வெற்றி சுலபம்!"

அவர் இப்படிச் சொன்னாலும், காங்கிரஸ் சார்பாகப் போட்டியிட ரங்கராஜன் என்பவர் சீட் கேட்டுத் தராததால் அவர் காங்கிரஸை எதிர்த்து வேலை செய்வதாகவும் சொல்கிறார்கள்!

தி. மு. க. வேட்பாளர் துரை சந்திரசேகரன் தி. மு. க. ஒன்றியச் செயலாளர். விவசாயக் குடும்பம். 'நல்ல தம்பி' என்று கட்சி சார்பற்றவர்கள் கூடச் சொல்கிறார்கள். தி. மு. க. வில் போட்டியிட பூதலூர் ஒன்றியத் தலைவர் கல்லணை காத்தான் என்பவரும் டிக்கெட் கேட்டார். ஆனால் தரப்படவில்லை. எனவே, அவர் இவரை எதிர்த்து வேலை செய்கிறார் என்றும் சொல்லப்படுகிறது. தி. மு. க. வோட்டுக்கள் 25,000 கட்டுக்கோப்பாக அப்படியே இருக்கிறதாம். அதனால், பல கட்சி வேட்பாளர்களுக்கு வோட்டுப் பிரியும் போது, தி. மு. க. வேட்பாளருக்கே அது சாதகமாக முடியும் என்றும் சொல்லுகிறார்கள்.

ஜெ. அணி வேட்பாளர் ஆழி. கோ. மருதையனைப் பற்றிக் கேட்கும்போது தொகுதி மக்கள் சொல்வது அவர் சில அ. தி. மு. க. முக்கியப் புள்ளிகளின் பினாமி என்பதும் ஊழல் பேர்வழி என்பதும்தான்!

சிவாஜி இந்தத் தொகுதியைச் சேர்ந்தவரல்லர் என்று பிரசாரம் செய்யப்படுவது பற்றி அவருக்காகத் தொகுதியில் வேலை பார்க்கும் தளபதி சண்முகத்திடம் கேட்ட போது, "அது ஒன்றும் பெரிய விஷயமில்லை ஸார். சூரக்கோட்டை போல் இன்னொரு பண்ணையை சிவாஜி திருவையாறு தொகுதியிலும் அமைத்து விடுவார். மாதம் இருமுறை வந்து போவார்" என்றார். 1984—இல் இத்தொகுதியில் வெற்றி பெற்ற துரை கோவிந்தராஜன் (ஜா. அணி) தற்போது சிவாஜிக்காகத் தீவிரமாக உழைத்து வருகிறார். தொகுதியில் தற்போதுள்ள நிலைமையைப் பார்க்கும் போது போட்டி, சிவாஜிக்கும் தி. மு. க. வுக்கும்தான் என்பது புரிகிறது. இருப்பினும் சிவாஜி மிகக் குறைந்த வாக்கு வித்தியாசத்திலாவது வெற்றி பெற்று விடுவார் என்றே பலரும் சொல்கிறார்கள்.



சிவாஜி: சில சங்கடங்கள்.

திருநாவுக்கரசு: "சென்றதை மறந்து விடுங்கள்!"

## மூப்பனார் வெற்றி சுலபமல்ல......

தமிழ்நாடென்ன, இந்தியாவே மூப்பனார் போட்டியிடும் பாபநாசம் தொகுதியின் முடிவை ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறது. கடந்த ஆறு தேர்தல்களாகத் தி. மு. க. அல்லது அ. தி. மு. க. வின் தோள்களில் சவாரி செய்தே காங்கிரஸ் தொடர்ந்து வெற்றி பெற்ற தொகுதி இது. 1977—இல் மட்டும் நான்கு முனைப் போட்டியில் காங்கிரஸ் தனியாகப் போட்டியிட்டு மிகக் குறைந்த வாக்கு வித்தியாசத்தில், வெற்றி பெற்றது.

மூப்பனாரை எதிர்த்துத் தி. மு. க. சார்பில் போட்டியிடுபவர் கல்யாண சுந்தரம். குடந்தை ஊராட்சி ஒன்றியத் தலைவராக இருக்கும் இவருக்குக் கிராமங்களில், குறிப்பாக இளைஞர்களிடம் நல்ல செல்வாக்கு இருக்கிறது. அ. தி. மு. க. ஜா. அணி சார்பாகப் போட்டியிடுபவர் வலம்புரி ஜான். எந்தத் தைரியத்தில், ஜான் இங்கு நிற்கிறார் என்பது அந்தக் கட்சிக்காரர்களுக்கே புரியாத புதிராக இருக்கிறது. ஜெ. அணியின் சார்பில் போட்டியிடுபவர் ராஜ் முகமது.

தொகுதி முழுக்க, முழுக்க, மூப்பனார், ராஜீவ் காந்தியின் ஆளுயரக் கட் அவுட்டுகள் வைக்கப் பட்டிருக்கின்றன. தி. மு. க. வும் கொஞ்சமும் சளைக்காமல், போட்டியாகப் பல வண்ணப் போஸ்டர்களையும், உதய சூரியன் பேனர்களையும் தொகுதியெங்கும் வைத்திருக்கிறது.

மூப்பனாரின் தம்பி, மகன், மற்றும் இ. காங்கிரஸ் எம். எல். ஏக்கள், எம். பிக்கள் என்று கணிசமான அளவுக்குத் தொகுதியில் மூப்பனாருக்காக வேலை செய்து கொண்டிருக்கிறார்கள். அண்டை மாநில அம்பாஸிடர் கார்களும் காங்கிரஸுக்காக உழைத்துக் கொண்டிருக்கின்றன!

மூப்பனாருக்குப் பெரும் தொல்லையாக விளங்குபவர், மாவட்டக் காங்கிரஸ் தலைவராக இருக்கும் துளசி அய்யா வாண்டையார்தான். வாண்டையார் மூப்பனாருக்கு எதிராக வெளிப்படையாக வேலை செய்யாவிட்டாலும், தமது வேலையைக் 'கமுக்கமாக'ச் செய்து கொண்டிருக்கிறார் என்று காங்கிரஸ்காரர்களே சொல்கிறார்கள். 'மூப்பனார் சொந்த மாவட்டத்துக்கு என்ன செய்திருக்கிறார்? போட்டியிட மட்டும் இங்கே வந்தால் போதுமா? வாண்டையாரைப் பாருங்கள்; ஒரு கல்லூரி வைத்திருக்கிறார். இவர் செய்தது என்ன?' என்று சில காங்கிரஸ்காரர்களே கேட்கிறார்கள்!

ஜா. வும், ஜெ. யும் வேட்பாளர்களை நிறுத்தியிருந்தாலும் உண்மையான போட்டி காங்கிரஸுக்கும் தி. மு. க. விற்கும்தான். தற்போது நிலைமை தி. மு. க. வுக்குச் சாதகமாக இருந்தாலும் இறுதிக் கட்டத்தில் மூப்பனார் எப்படியாவது வெற்றி பெற்று விடுவார் என்கிறார்கள்.

தொண்டர் ஆறுமுகம்: ''காங்கிரஸுக்கே வெற்றி!''









தளபதி சண்முகம்: சிவாஜிக்காக உழைக்கிறார்.



## அசிங்க அரசியல் அறந்தாங்கியைப் பாதிக்காதா?

'தூக்குப் போட்டுக் கொண்டாலும் கொள்வேனே தவிர, மீண்டும் ஜெயலலிதா அணியில் சேர மாட்டேன்' என்று சூளுரைத்த திருநாவுக்கரசு இப்போது ஜெ. அணி வேட்பாளராகப் போட்டியிடுவது அறந்தாங்கி தொகுதியில். அவரை எதிர்த்துத் தி.மு.க. வில் வக்கீல் சண்முகசுந்தரமும், ஜா அணி சார்பில் வெங்கடாசலம் என்பவரும் காங்கிரஸ் சார்பில் கலந்தர் நைனா முகமது என்பவரும் போட்டியிடுகிறார்கள்.

இதில் ஜா. அணி வேட்பாளர் வெங்கடாசலம், பக்கத்துத் தொகுதியான ஆலங்குடியைச் சேர்ந்தவர். ஆர். எம். வீ.யின் 'நெருக்கமான புள்ளி' என்கிறார்கள். தி. மு. க. வேட்பாளர் சண்முக சுந்தரத்துக்குத் தலைவலியைத் தருபவர் அவரது கட்சியைச் சேர்ந்த பெரிய கருப்பன் என்பவர். ஆவுடையார் கோயில் ஒன்றியச் செயலாளராக இருக்கும் இவர் டிக்கெட் கேட்டுக் கொடுக்கப்படாததால் எதிராக வேலை செய்கிறாராம்.

காங்கிரஸ் வேட்பாளர் நைனா முகமது, இந்தத் தொகுதியில் உள்ள 30,000 முஸ்லிம் வோட்டுக்களை நம்பியே நிற்கிறார். கடந்த மூன்று தேர்தல்களிலும் திருநாவுக்கரசு வெற்றிக்காக உழைத்தவர் இவர். இப்போது எதிர்த்து நிற்கிறார்.

ஜாதிக் கணக்கெல்லாம் இந்தத் தொகுதியில் எடுபடாது. காரணம், கடந்த மூன்று தேர்தல்களிலும் இங்கு வெற்றி பெற்றுக் கூட்டுறவு நெசவாலை, சர்க்கரை ஆலை, பாலிடெக்னிக், ஆஸ்பத்திரிகள் என்று பல வசதிகளைத் தொகுதிக்குச் செய்திருக்கிறார் திருநாவுக்கரசு. பல கிராமங்களுக்குப் பஸ் வசதி, சாலை வசதிகளையும் செய்திருக்கிறார். தொகுதியில் உள்ள பலருக்கும் ஏதாவது ஒரு நல்ல காரியம் செய்து கொடுத்துத் தொடர்பு வைத்துக் கொண்டிருக்கிறார். அப்படியிருந்தும், இந்த முறை கடுமையாகப் பிரசாரத்தில் இறங்கியிருக்கிறார். பிரசாரத்தின் போது திருநாவுக்கரசைச் சந்தித்து, ''மீண்டும் ஜெ. அணியில் சேருவதற்குப் பதில், 'தூக்கில் தொங்குவேன்' என்றெல்லாம் பேசிவிட்டு ஜெ. வுடன் சேர்ந்து விட்டீர்களே!'' என்றோம். ''சென்றதை மறந்து விடுங்கள். past is past...'' என்றார் திருநாவுக்கரசு.

கடந்த முறை 30,000 வாக்குகள் வித்தியாசத்தில் வெற்றி பெற்ற திருநாவுக்கரசு இந்த முறை வித்தியாசத்தை அதிகரித்தாலும் ஆச்சரியப்பட வேண்டியதில்லை என்றே தோன்றியது.

## வீரப்பனுக்குக் கடும் போட்டி!

நெல்லை இடைத் தேர்தலில் போட்டியிட்டு வென்ற ஆர். எம். வீரப்பன் இப்போது பழைய தொகுதியை விட்டு விட்டுச் சொந்த மாவட்டத்திற்கே வந்து புதுக்கோட்டையில் போட்டியிடுகிறார். இவரை எதிர்த்துத் தி. மு. க. சார்பாகப் போட்டியிடுபவர் பெரியண்ணன். காங்கிரஸ் சார்பாக முகமது கனியும், ஜெ. அணியின் சார்பாகச் செல்லத்துரையும் போட்டியிடுகிறார்கள்.

புதுக்கோட்டை நகரத் தெருக்களில், தகட்டினால் செய்த பெரிய, பெரிய போர்டுகளை வைத்து அசத்தியிருக்கிறார் ஆர்.எம்.வீ. மேலும் மிக விலையுயர்ந்த துணிகளைத் தோரணங்களாகத் தொங்க விட்டுள்ளார். இதுதவிர அவருக்குச் சொந்தமான தியேட்டரில் படம் போட்டுப் பிரசாரமும் செய்கிறார். சுயேச்சையாகப் போட்டியிட்டு வென்று புதுக்கோட்டை நகர் மன்றத் தலைவராக இருக்கும் தியாகராஜ காடுவெட்டியாரையும் வளைத்துக் கைக்குள் போட்டுக் கொண்டுவிட்டார் ஆர்.எம்.வீ.

பெரியண்ணன் தீவிரமான தி. மு. க. ஊழியர். பல போராட்டங்களிலும், எமர்ஜென்ஸி காலத்திலும் சிறைக்குச் சென்றிருக்கிறார். கடந்த தேர்தலில் ஆலங்குடி சட்டமன்றத் தொகுதியில் போட்டியிட்டுத் தோற்றவர். ''மாவட்டம், மாவட்டம்'' என்று தி. மு. க. வினரால் அன்புடன் அழைக்கப்படும் பெரியண்ணன், முழுநேர அரசியல்வாதி. தி. மு. க. தொண்டர்கள் திட்டமிட்டுத் தெளிவாக வேலை செய்து வருகிறார்கள்.

தேர்தல் பொதுக் கூட்டங்களில், காங்கிரஸ் கூட்டத்துக்கு மக்கள் வரவு மிகவும் குறைவு என்பது ஒரு காங்கிரஸ் கூட்டத்தைப்

# மக்கள் சேவையில்
# 88 ஆண்டுகள் !

பாங்க் ஆப் தஞ்சாவூர் லிட் —

30-12-1988 அன்று தனது டெபாசிட்டுகளை

## ரூ 100 கோடி

க்கு மேல்

உயர்த்தியுள்ளது என்பதனை மிகவும் பெருமையுடன் தெரிவித்துக் கொள்கிறோம். டெபாசிட் சேமிப்பில் ஒரு மைல் கல்! இத்தருணத்தில்

பங்குதாரர்களுக்கும் —

வாடிக்கையாளர்களுக்கும் —

மற்றும் நலம் நாடுவோர்க்கும்

எங்களது இதயங்கனிந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள்வதில் பேருவகை அடைகிறோம். மகிழ்ச்சியான இவ்வேளையில் எங்களை மீண்டும் ஒரு முறை அர்ப்பணித்துக் கொண்டு தொடர்ந்து சேவை புரிய புதுப் பொலிவுடன் உறுதி மேற்கொள்கிறோம்.



**பாங்க் ஆப்**
**தஞ்சாவூர் லிமிடெட்**

(பதிவு அலுவலகம் : 1087, மிஷன்தெரு
தஞ்சாவூர் - 613 001.)
(வளமைக்கு வழி காட்டும் வங்கி)

V. சுப்ரமணியன்
சேர்மன்

LOTUS

# தேர்தல் சிப்ஸ்






○ கோவையில் அலிபாபாவும் நாற்பது திருடர்களும் படம் ஓடிக் கொண்டிருக்கும் ஒரு தியேட்டரில், எம். ஜி. ஆர். இரண்டு புறாக்களைப் பறக்க விடுவது போன்ற காட்சி ஒரு பாடலின் போது வருகிறது. அந்த சமயம், படம் நிறுத்தப்பட்டு, ''புரட்சித் தலைவர் ஆதரவு பெற்ற அன்னை ஜானகி எம். ஜி. ஆரின் சின்னம் இரட்டைப் புறா'' என்று ஒரு ஸ்லைடு காட்டுகிறார்கள்!

○ 'பகுத்தறிவுப் பாசறையில் வளர்ந்தவர்' என்று சொல்லிக் கொள்ளும் நாஞ்சில் மனோகரன் திருவல்லிக்கேணி; பார்த்த சாரதி கோவிலில் சாமிக்கு அர்ச்சனை செய்து விட்டுத்தான் தம் தொகுதியில் பிரசாரத்தைத் துவக்கினார்.

○ பல்வேறு கட்சியினரும், வாக்கு சேகரிக்கத் தொகுதிகளில் செல்லும் போது, பெண்கள் ஆரத்தி எடுக்கிறார்கள். அந்தத் தட்டில் ஐந்து, பத்து என்று ரூபாய் நோட்டுகளைப் போட்டு, பெண்களைக் கவரப் பார்க்கிறார்கள், வேட்பாளர்கள்.

○ திருத்தணி தொகுதியில் தி. மு. க. வேட்பாளருக்காகக் காரில் உட்கார்ந்து கொண்டு, ''நல்ல காலம் பொறக்குது! நல்ல காலம் பொறக்குது! தி. மு. க. ஆட்சி வருது!'' என்று மைக்கில் குடுகுடுப்பை அடித்தபடியே பிரசாரம் நடக்கிறது!

○ விழுப்புரம் பஸ் நிலையம் அருகில், தி. மு. க. அபிமானியான ஒரு வாழைப்பழ வியாபாரி, ''வழக்கமா ரூபாய்க்கு ரெண்டு பழம்; தி. மு. க. வுக்கு வோட்டுப் போடறேன்னு வந்து சொல்றவங்களுக்கு ரூபாய்க்கு நாலு பழம்!'' என்று கூவுகிறார்! நாலு பழத்தைத் தரும்போது, ''ஐயா! உதய சூரியனை மறந்துடாதீங்க'' என்று கேட்டுக் கொள்கிறார்!

○ காஞ்சீபுரம் கோவில் யானை, திருத்தணி கோவிலுக்குப் போய்க் கொண்டிருந்தது. அது அரக்கோணம் வந்தபோது, பொன் விஜயராகவன் பிரிவு ஜனதாக் கட்சியினர், தம் வேட்பாளருக்காக, அந்த யானையைப் பிரசாரத்துக்குப் பயன்படுத்திக் கொண்டனர். யானைக்கு முன்னும் பின்னும், ''உங்கள் சின்னம் யானை!'' என்று பேனர்கள் பிடித்தபடி நடந்து பிரசாரம் செய்தனர்.

— ஜாலி

பார்த்த போது தெரிந்தது. இந்நிலையில் முகமது கனிக்கு வாய்ப்பு எங்கே பிரகாசமாக இருக்கும்? ஜெ. அணி சார்பாக நிற்கும் செல்லத்துரை, எஸ். டி. எஸ்.ஸுக்கு மிகவும் வேண்டியவர். சென்ற தேர்தலில் நமது கழகம் வேட்பாளராக நின்று தோற்றவர். ஆக மொத்தத்தில் போட்டி என்று பார்த்தால் ஆர். எம். வீக்கும், தி. மு. க. வேட்பாளர் பெரியண்ணனுக்கும்தான்.

தி. மு. க. வினர் ஆர். எம். வீக்கு எதிராகக் கடுமையான பிரசாரத்தை மேற்கொண்டுள்ளனர். 'சந்தனக் கட்டைகளைத் திருடியவர், முருகன் கோவில் வேலைக் காணாமல் போக்கியவர்; உண்டியலைக் கொள்ளையடித்தவர்...' என்றெல்லாம் பிரசாரம் செய்கிறார்கள். இந்நிலையில் வெற்றி பெற, ஆர். எம். வீ. கடுமையாக உழைக்க வேண்டும். கொஞ்சம் அசட்டையாக இருந்தால்கூட பெரியண்ணன், ஜாம், ஜாமென்று வென்று விடுவார் என்றே சொல்கிறார்கள்.

— நமது நிருபர்.

படங்கள்: எட்வர்ட்

அட்டை வண்ணப்படங்கள்:
'சுபா' ரவிசங்கர்

# சகாதேவன் மகாதேவன்

சிரிப்பு மேடைப் புகழ் சேகர் இருக்கிறாரே மன்னன் கட்டையைக் கிடத்தினார் என்றால் மூச்சு விட மறந்து விட்டார் என்று நம்பிக் கொண்டு உற்றார் உறவெல்லாம் கூடி மூசுமூசென்று ஒப்பாரி வைத்துக் கொண்டு இறுதி மரியாதை செலுத்துகிறார்கள். 'தூக்கத்தைப் பாரு, எழுந்திருடா சோம்பேறிக் கழுதை!' என்று அப்பாக்காரர் உசுப்ப, மலங்க மலங்க விழித்துக் கொண்டு எழுந்திருக்கிறாராம்.

இந்த மகாதேவன் தன் முறைப் பெண்டிர் மூவரில் ஒருத்தியை



மணந்தால்தான் உள்ளூரில் உயிர் வாழலாம் என்ற நிர்ப்பந்தம் வந்த போது, ஊரை விட்டு வெளியேறத் தீர்மானிக்கிறார். இந்தக் கட்டத்தில் தான் மாமாக்காரர் இடிச்சபுளி செமர்த்தியாய்ப் பழிவாங்கி விடுகிறார். மெட்ராசில் அவருடைய நண்பர் சகாதேவன் — ரொம்ப ரொம்ப வசதியானவர். சேகருக்காக உத்தியோகம் வைத்துக் கொண்டிருப்பதாய் ஓதி, அவரிடம் அடைக்கலம் புகுந்தால் பலனுண்டு என்று அனுப்பி வைக்கிறார். அந்த சகாதேவனோ வருடக் கணக்காய் வீட்டு வாடகை தராமல் உத்தியோக வேட்டையாடிக் கொண்டிருக்கும் கேஸ். இப்படி வேலையில்லாப் பட்டதாரிகள் சகாதேவன், மகாதேவன் சேர்ந்து அடிக்கும் சற்றே சென்ட்டிமெண்ட் இழையோடும் காதல் கூத்துதான் கதை.

இந்தக் கோஷ்டியில் பெண்ணுக்குத் தகப்பனாய் வருகிற எஸ். எஸ். சந்திரன் அரசியல் கிண்டலில் புகுந்து அத்தனை பேரையும் வாரிக் கொண்டு போக முயன்றிருக்கிறார். ஆனால் எல்லாக் கட்சி சார்பிலும் அவரால் பாராட்டுப் பெற முடியவில்லை. அந்த நாலு பேர் என்று கூட்டுச் சேர்த்துக் கொண்டு, 'ஜெயிக்கப் போறது எங்க கட்சிதான்', என்று அடித்துப் பேசும் போது டைரக்டர் ராம. நாராயணன் நிற்கும் தொகுதிக்குப் பிரசாரம் செய்கிற மாதிரி தோன்றுகிறது. படம் பார்க்கிற அத்தனை பேரும் அந்தக் கட்சியைச் சேர்ந்தவர்கள் இல்லையே? அதனால் மற்றவர்களின் எரிச்சலை அமோகமாகப் பெறுகிறார்.

நல்ல வேளை, சேகர் பானைக்குள் ஆனையை அடக்கும் முயற்சியில் இறங்கவில்லை. அதனால்தானோ என்னவோ பல்லவியிடமிருந்து, 'மணந்தால் மகாதேவன்; இல்லையேல் மரண தேவன்', என்று பாராட்டுப் பெறும் அளவுக்கு அந்தஸ்தை உயர்த்திக் கொண்டு விட்டார்.

தேவலை பல்லவி. படு சரளம்.

கட்சிக்குப் பணம் சேர்க்க என்ன வேண்டுமானாலும் செய்யலாம் என்று போதிக்கிறாரா சந்திரன்? அதுதான் சொந்த வீட்டில் தன் பெண்ணையே கடத்திப் போய் பிளாக் மெயில் செய்து பெண்டாட்டியிடம் பணம் கறக்க இவர் இரண்டு முகமூடிகளை ஏற்பாடு செய்கிறாரே அதைச் சொல்கிறோம். அதே சமயம் தன்னைக் கடத்திப் போய்ப் பெற்றவர்களிடம் பணம் வசூலிக்க மோகனையும் சேகரையும் முகமூடிகளாய் வரும்படி பல்லவி ஏற்பாடு செய்ய, தாய் கோவை சரளா, மகள் கட்டிலில் வந்து படுக்க, முந்தைய முகமூடிகள் அவரைக் கடத்திப் போக, பிந்தையவர்கள் குறுக்கிட்டு மோத குட்டு உடைவது வேறு.

ஏன் எதற்கு என்று தெரியாமல் கிளைமாக்ஸ் காட்சியில் மூன்று ஜோடிகளும் (சந்திரன் சரளா உள்ளிட்ட) பழைய எம்.ஜி.ஆர்., சிவாஜி பாடல்கள் ட்யூனில் அந்தந்தக் காஸ்ட்யூம்லேயே வந்து பாடிக் கூத்தடிப்பது அபத்தமாய் இருந்தாலும், சிரிக்க வைக்க மேற்கொண்ட முயற்சிக்கு வெற்றிதான்.

— பி. எஸ். எஸ்.

# ப.உ.ச., அப்துஸ் சமது, யசோதா- வெற்றி பெறுவார்களா?

இந்தத் தேர்தலில், அப்துஸ் சமது கோஷ்டி, லத்தீப் கோஷ்டி என்று தமிழக முஸ்லீம் லீக் இரண்டாகப் பிளவுபட்டு வாணியம்பாடி தொகுதியில் மோதிக் கொள்கிறது. காங்கிரஸ் கட்சியின் ஆதரவோடு, 'லத்தீப் கோஷ்டி வேட்பாளரை அவர் சொந்த ஊரிலேயே தோற்கடித்துக் காட்டுகிறேன்' என்ற சவாலோடு போட்டியிடுகிறார் தலைவர் ஏ.கே.ஏ. அப்துஸ் சமது. தி. மு. க. ஆதரவோடு போட்டியிடும் லத்தீப் கோஷ்டியைச் சேர்ந்த வேட்பாளர் பெயர் பி. அப்துஸ் சமது. இவர் வாணியம்பாடி தொகுதியைச் சேர்ந்தவர் என்பதால் மக்களுக்கு அறிமுகமானவராக இருக்கிறார். ஏ.கே.ஏ. அப்துஸ் சமது வெளியூர்க்காரர் என்பதால் மக்களிடம் கொஞ்சம் தயக்கம் இருப்பதாகச் சொல்கிறார்கள். மேலும் வாணியம்பாடித் தொகுதியிலுள்ள காங்கிரஸ்காரர்களுக்குத் தொகுதியைத் தங்கள் கட்சிக்கு ஒதுக்காததில் அதிருப்தியும் இருப்பதால் ஏ.கே.ஏ. அப்துஸ் சமதுக்கு அவர்கள் முழு மனத்தோடு தேர்தல் வேலை செய்யவில்லை என்றும் சொல்கிறார்கள்.

இவர்களை எதிர்த்து ஜெ. அணி சார்பில் போட்டியிடுபவர் குலசேகர பாண்டியன். இவர் கடந்த 80—இல் தேர்ந்தெடுக்கப்பட்டவர் எனினும் தொகுதி மக்களிடம் எந்தவிதமான நன்மதிப்பையும் பெறாதவர் என்கிறார்கள். அவரது சொந்த கிராமத்திலேயே இளைஞர்கள் வெளியிட்டுள்ள நோட்டீஸ் அவரைக் கடுமையாக விமர்சிக்கிறது. ஜா. அணி ஆதரவுடன் போட்டியிடும் இன்னொருவர், தமிழக முன்னேற்ற முன்னணியைச் சேர்ந்த சோலையப்பன். இவர் பஸ் ஸ்டாண்டில் சுமை தூக்கும் தொழிலாளியாக வாழ்க்கையைத் துவக்கியவர் என்பதால் எளிய மக்களின் ஆதரவு கிடைக்க வாய்ப்பிருக்கிறது.

இவர்கள் இருவரும் வெற்றி பெறும் வாய்ப்பு மிகக் குறைவுதான் என்றாலும் கணிசமான அளவுக்காவது வாக்குகளைப் பிரித்து ஏ.கே.ஏ. அப்துஸ் சமதின் வெற்றி வாய்ப்பை மங்கச் செய்து விடுவார்கள்; எனவே, லத்தீப் கோஷ்டி வேட்பாளர்தான் வெற்றி வாய்ப்பில் பிரகாசமாக இருக்கிறார் என்கிறார்கள்.

மேலும், உள்ளூர்ப் பிரமுகர்களிடமும் பத்திரிகையாளர்களிடமும் பேசிப் பார்த்தபோது, வடாற்காடு மாவட்டத்தைப் பொறுத்தவரை தி. மு. க.தான் அதிக இடங்களைப் பெறும் என்றும், காங்கிரஸ், ஜா. அணி, ஜெ. அணிகளை விடக் குறை

• பி. அப்துஸ் சமது: உள்ளூர்க்காரர்.





• டி.ஆர். வரதராஜன்: கண்ணியமானவர்!



• யசோதா: தொகுதி மாறியது ஏன்?



• ஏ.கே.ஏ. அப்துஸ் சமது: சவால் விட்டிருக்கிறார்!

• ப. உ. ச.: தொகுதிக்கு ஏதும் செய்யவில்லை!



வாகவே பெறும் என்றும்தான் சொல்கிறார்கள்.

**தெ**ன்னாற்காடு மாவட்டத்திலுள்ள மேல் மலையனூர் தொகுதியில் போட்டியிடுகிறார் ப. உ. சண்முகம் (ஜா. அணி). சென்ற முறை இவர் தேர்ந்தெடுக்கப்பட்டு அமைச்சரானது இந்தத் தொகுதியில்தான். எனினும் தொகுதியில் குறிப்பிடும்படியான எந்தவொரு காரியத்தையும் இவர் செய்யாதது இப்போது வந்து இவரைப் பூதாகரமாகப் பயமுறுத்துகிறது! இருநூறுக்கும் மேற்பட்ட கிராமங்களை உள்ளடக்கிய இத் தொகுதியில் இன்னும் பல கிராமங்களுக்குப் பஸ் வசதியோ குடிநீர் வசதியோ கூட இன்னும் செய்து தரப்படவில்லை என்பது எப்படி ப. உ. ச. வுக்குச் சாதகமாக இருக்க முடியும்?

இவரை எதிர்த்துப் போட்டியிடும் காங்கிரஸ் வேட்பாளர் பெயர் ராஜதுரை. கோபிநாத் என்பவருக்குக் கொடுக்காமல் இவருக்குக் கொடுத்ததில் காங்கிரஸிலுள்ள ஒரு சாராருக்கு ஏகப்பட்ட அதிருப்தி. ஜெ. அணி வேட்பாளரின் வெற்றி வாய்ப்பும் மிக அரிது என்பதால், தி. மு. க. வேட்பாளரான பஞ்சாட்சரத்திற்கே வாய்ப்பு அதிகம் என்கிறார்கள்.

மேலும் தென்னாற்காடு மாவட்டத்தைப் பொறுத்தவரை இத் தேர்தல் வெற்றி வாய்ப்பைத் தி. மு. க., காங்கிரஸ், ஜா. அணி, ஜெ. அணி, மார்க்ஸிஸ்ட் கட்சி என்று வரிசைப்படுத்தலாம் என்றும் சொல்கிறார்கள்.

**ஸ்ரீ**பெரும்புதூரில் இரண்டு முறை வெற்றி பெற்ற தமிழக இ. காங்கிரஸ் பொதுச் செயலாளர்களில் ஒருவரான திருமதி. யசோதா இப்போது தொகுதி மாறி வந்து பொன்னேரியில் போட்டியிடுகிறார். இவருக்குப் பணம் ஒரு பிரச்னையல்ல. 'வெற்றி வாய்ப்பு எப்படி?' என்று இவரைக் கேட்டால், 'நமக்குத்தாங்க வெற்றி!' என்கிறார் முகமலர்ச்சியுடன்.

ஆனால், இவர் பழைய தொகுதி மக்களிடம் பெற்ற அவப் பெயர்தான் இப்போது தொகுதி மாறியிருப்பதற்கான முக்கிய காரணம் என்கிறார்கள் பலரும். அது மட்டும்தான் இவருக்கு மைனஸ் பாயிண்ட் என்பதல்ல; வழக்கமாகக் காங்கிரஸுக்குள் இருக்கும் கோஷ்டி மனப்பான்மையும் இவருக்குள்ள மைனஸ் பாயிண்ட்களில் ஒன்று என்றும் கூறலாம். இதனை இவர் சரிக்கட்டுவதற்குள்ளேயே தேர்தல் முடிந்து விடும்!

இவருடைய நிலை இப்படி இருப்பதால் தி. மு. க. வேட்பாளரான சுந்தரத்திற்கே வாய்ப்பு அதிகம் என்றும் கூறி விட முடியாது. காரணம் ஜெயலலிதா அணியின் கொக்கரக்கோதான் இத் தொகுதியில் கிராமப்புறங்களில் ஒலிக்கிறது. எனவே நிலைமை கடுமையானதென்றே பலரும் சொல்கிறார்கள். தவிர, ஜா. அணியைச் சேர்ந்த பழைய எம்.எல்.ஏ. சேகர் ('தொகுதிக்கு என்ன செய்தார்?') அம்பேத்கார் மன்றத்தின் ராமமூர்த்தி ஆகியோரும் களத்தில் உள்ளனர்.



• சந்திரசில்: ''அசிங்கப்பட்டுப் போச்சுங்க...''



• ராமகவுண்டர்: ''எம். ஜி. ஆர். இருந்தபோது அவருக்குப் போட்டோம். இப்போ தலைவருக்குத் தாங்க...''



• சின்னக்குழந்தை: ''எங்க சின்னம் ரெட்டைப் புறா தாங்க...''



• வேலு: ''ராஜீவ் காந்திக்காகக் 'கை'க்குத்தாங்க போடணும்...''



• ராமு: ''கிராமப்புறங்களிலே இன்னும் ஜெயலலிதா மாயை இருக்குங்க...''



• சமலா: ''இரட்டை இலைக்குப் பிறகு எங்களுக்குச் சேவல்தாங்க....''

**க**டைசியாக ஒன்று. எந்தக் கட்சியையும் சாராத மக்கள் கூட இவர் வெற்றி பெற்றால் நன்றாக இருக்கும் என்று நினைக்கக்கூடிய நிலையிலிருப்பவர், இந்தியாவிலேயே மிகப் பெரிய தொகுதியான வில்லிவாக்கம் தொகுதியில் தி. மு. க. ஆதரவோடு போட்டியிடும் மார்க்ஸிஸ்ட் கட்சி வேட்பாளரான டபுள்யு. ஆர். வரதராஜன். இவர் ரிசர்வ் வங்கி வேலையை விட்டு விட்டுத் தொழிற்சங்க பணியில் இறங்கியவர். மேல் சபைக்கான பட்டதாரித் தொகுதியில் நின்று தோற்றுப் போனவர் என்றாலும் தொழிலாளர் மற்றும் நடுத்தர படித்த மக்களிடையே பரவலான செல்வாக்குப் பெற்றிருக்கிறார். இவரை எதிர்த்து ஜே. வி. டி. பிரபாகரன், மணிவர்மா உள்பட 31 பேர் நின்றாலும், 'இவர் வெற்றி பெற்றுச் சட்ட சபைக்குச் சென்றால் சட்டசபை கண்ணியமான உறுப்பினர் ஒருவரைப் பெற்ற பெருமையைப் பெறும்' என்று பலராலும் கருதப்படுகிறார். இப்படியொரு பெயர் வாங்குவதே மிகப் பெரிய விஷயமல்லவா!

தொகுப்பு: **தில்லப்பா**

படங்கள்: **எட்வர்ட்**

2

# சுக போகத் தீவுகள்

## சென்ற வாரம்...

கிருஷ்ணமூர்த்தி ஓர் எம். ஏ. பட்டதாரி. மதுரை மாவட்டத்துக் கிராமம் ஒன்றில் அன்பே உருவான அப்பா அம்மா, தங்கை சரசு ஆகியோருடன் வசிப்பவன். கிருஷ்ணமூர்த்தி சம்பாதித்துத்தான் குடும்பம் நடக்க வேண்டிய நிலை இல்லை. எனினும் உத்தியோகம் என்பது, தன் சுய நம்பிக்கையை வளர்க்கவும், தன் மீது தனக்கே மரியாதையும் நம்பிக்கையும் ஏற்படுத்தும் கருவி என்று நினைத்தும் சென்னைக்குக் கிளம்புகிறான். ஒரு காலத்தில் அவன் வீட்டில் உண்டு வளர்ந்த தெய்வநாயகம் மாமா சென்னையில் பெரிய தலைவராக இருக்கிறார். அவரைப் பார்த்து அவருடன் தங்கி வேலை ஏதேனும் தேடிக் கொள் என்று அப்பா சொன்னதைக் கேட்டு அவரைப் பார்த்து உதவி பெற, சென்னை பஸ்ஸைப் பிடித்து, ஒரு நாள் மாலை இருட்டிய நேரத்தில் சென்னை வந்து சேர்கிறான். தருமமிகு சென்னை என்று புகழப் பட்ட தமிழகத் தலைநகரம் தன் கூரிய நகங்களைக் கொண்ட கைகளை விரித்து அவனைத் தனக்குள் சேர்த்துப் புதைத்துக் கொள்கிறது.

இனி......

மூர்த்திக்குக் கண்கள் கூசின.

நகரம் இவ்வளவு வெளிச்சமாக இருக்கும் என்று அவன் எண்ணிப் பார்த்ததில்லை. சினிமாவில் நகரத்தை அவன் பார்த்திருந்தான். மிக அகன்ற வீதிகளில், கதாநாயகன் இடுப்பைச் சுற்றிக் கொண்டு ஒரு கொடி போல நாயகி இருக்க, நாயகன் அசுர வேகத்தில் மோட்டார் சைக்கிளை விட்டுச் சென்றதை அவன் கண்டிருக்கிறான். வண்ணப் பூக்களும், நீரைப் பாய்ச்சி அடிக்கும் குழல்களும் நிறைந்த தோட்டத்தில் அவர்கள் பாடியதையும், வில்லன்களும் அவர்களது அடியாட்களும் குடித்துக் கொம்மாளமிடும் இரவுக் கிளப்புகளும், அங்கு ஆடையே இல்லாத ஆடையுடன் ஒருத்தி ஆடுவதை, அவள் ஒவ்வொரு மேசையின் அருகிலும் வந்து குலுங்கிப் பாடுவதையும் அவன் பார்த்திருக்கிறான். நிஜமான பூமியைப் பார்க்கையில் சட்டென்று ஓர் ஏமாற்றம் அவன் மனத்தில் தெருடிற்று.

பிரபஞ்சன்

யாரோ ஒருவன் தன் முகத்துக்குத் தானே டார்ச்லைட் அடித்துக் கொண்டு நிற்பது மாதிரி அபத்தமாக அந்த நகரம் நின்றது. மாமா அடையாற்றுப் பகுதியில் வீடு எடுத்து இருந்ததாக அப்பா சொல்லியிருந்தார். அடையாற்றுக்குப் பஸ்ஸில் போகலாம். ஆட்டோவிலும் போகலாம். ஆட்டோ என்றால் கொஞ்சம் கூடுதல் செலவாகும். ஆனால் சீக்கிரம் சென்று விடலாம். ஆகவே அவன் ஆட்டோவைத் தேர்ந்தெடுத்தான்.

மாமாவின் வீடு பார்க்க மிகப் பெரிதாக இருந்தது. வீடுகளில் இது யானை. ஆனால், அது சத்தம் போட்டுக் கொண்டிருப்பதாக மூர்த்திக்குத் தோன்றியது. வீடுகளுக்கும் மனிதர்களைப் போல முகம் உண்டு. சில சிரிக்கும். சில அழும். சில பீற்றிக் கொள்ளும். மாமாவின் வீடு, சுக வாசத்தால் வீங்கிப் பருத்துப் போன மத்திய வயதுப் பெண் போலவும், புதிதாக வாங்கிய நகையைப் பக்கத்து வீட்டுக்காரிக்குக் காட்டிப் பெருமை அடித்துக் கொள்பவள் போலவும் சத்தம் போட்டுக் கொண்டிருந்தது. இடதும், வலதுமாக இருந்த இரண்டு இரும்பு கேட்டில், இடதுபுற வழியாக உள்ளே சென்றான் மூர்த்தி. நடைபாதைக்கு



இடப் பக்கமாக, ஒழுங்கு செய்யப்பட்ட குரோட்டன் வகைச் செடிகள். வலப் பக்கம் பட்டு ரோஜா மற்றும் கனகாம்பரச் செடிகள். ஒரு பழைய வேம்பும் மாவும், அந்த வீட்டுப் பழைமையைச் சுட்டுவது போல் காட்சியளித்தன.

வீட்டுக்கு வெளியே மூன்று கார்கள் நிறுத்தி வைக்கப்பட்டிருந்தன. ஒரு மாருதி, இரண்டு அம்பாசிடர்கள். இதில் எது மாமாவுடையது என்று விளங்கவில்லை. போகப் போகத் தெரியும். வீட்டின் வரவேற்பறை, சோபாக்கள், நாற்காலிகள் மற்றும் பார்வையாளர் சிலரால் நிரம்பி இருந்தது.

மூர்த்தி தயங்கி நின்றான். மாமா எங்கிருப்பார்? யாரிடம் கேட்பது?

அவன் உதவிக்கு வருபவர் போல், அவனை நோக்கிக் கண்ணாடி அணிந்த, சுமார் முப்பது வயதும், கொஞ்சம் கூடுதல் எண்ணெய் பூசி அழுந்த வாரி விடப்பட்ட தலையும், மிகுந்த வெண்மை தரும் சட்டையும் வேட்டியும் அணிந்த ஒருவர் வந்து, ''என்ன வேண்டும்?'' என்றார்.

மாமாவுக்கு அவர் உதவியாளராக இருக்க வேண்டும் என நினைத்துக் கொண்டான் மூர்த்தி.

''நான் கிருஷ்ணமூர்த்தி. உத்தமபாளையத்திலிருந்து வருகிறேன். தெய்வ நாயகம் எனக்கு மாமா. நான் வருவது அவருக்குத் தெரியும். அவரை நான் பார்க்க முடியுமா?''

''இருங்கள். தலைவரிடம் சொல்லி விட்டு வருகிறேன்'' என்று அவர், ஹாலையொட்டியஇடப்பக்க அறையைத் திறந்து கொண்டு உள்ளே சென்றார்.

மூர்த்தி வரவேற்பறையை நோட்டம் விட்டான். அவன் உட்கார நினைத்தாலும், இடம் இல்லாத படி சோபாக்கள், நாற்காலிகள் அனைத்தும் நிரம்பியிருந்தன. சுவரில், முதல் அமைச்சருக்கு மாலை போட்டுக் கொண்டிருந்தார் மாமா. அடுத்த படத்தில் மாமாவுக்கு மாலை போட்டுக் கொண்டிருந்தார் முதல் அமைச்சர்.

உள்ளே சென்றவர் திரும்பி வந்து, ''வாருங்கள்'' என்று அவனை அழைத்தார். மூர்த்தி அந்த அறைக்குள் நுழைந்தான். உள்ளே நுழைந்ததுமே, விசுக்கென்று ஊதல் காற்று அடித்த மாதிரி, ஏ.சி.யின் குளிர்க் காற்று அவன் முகத்தில் மோதியது. மிகக் குறைந்த வெளிச்சத்தில் இரண்டு பேர் அமர்ந்திருந்தது தெரிந்தது.

''வா, மூர்த்தி'' என்றார் இடப்பக்க ஒற்றைச் சோபாவில் அமர்ந்திருந்தவர். அவர்தான் மாமாவாக இருக்க வேண்டும்.



எத்தனை வருஷங்களுக்கு முன் பார்த்தது?

''வணக்கம்'' என்று கை கூப்பினான் மூர்த்தி.

''உட்கார்'' என்று அவருக்கு முன் இருந்த சோபாவைச் சுட்டிய அவர், அவன் உட்கார்ந்ததும், தன் எதிரில் இருந்த மற்றொரு நபரைப் பார்த்து, ''இவர் மூர்த்தி. முழுப் பேர் கிருஷ்ணமூர்த்தி. நம்ம உறவுக்காரப் பையன். மச்சினன் முறை. எம்.ஏ., படிச்சிருக்கார். இவர் அப்பா, அம்மாதான் என்னை ஒரு காலத்தில் சோறு போட்டு வளர்த்தவர்கள். என் உடம்பில் ஓடுகிற ரத்தத்தில் ஒரு பகுதி இவர் குடும்பத்துக்குச் சொந்தம். இனி என்னோடதான் இருப்பார்'' என்று அறிமுகப்படுத்தினார்.

மூர்த்திக்குக் கூச்சமாக இருந்தது. மாமாவின் அறிமுகம் கொஞ்சம் அதிகப்படி என்று தோன்றியது. ஆனால் மாமாவின் சுபாவமே அதுதான் என்பதை அவன் பின்னால்தான் உணர முடிந்தது.

''மூர்த்தி! இவரு அழகிய சிங்கபுரம் யூனியன் சேர்மன் ஐயாவு. நமக்கு வேண்டப்பட்டவர். ஆளைப் பார்த்து வச்சுக்கோ'' என்றார்.

சேர்மன் இவனைப் பார்த்து முறுவலித்தார்.

கன்னங் கரிய அவர் உடம்புக்கு அந்த வெள்ளைச் சட்டை அதீத வெள்ளையாகத் தெரிந்தது. அவர் மூர்த்தியை மிகுந்த ஆழமாகவும், யோசனையோடும் பார்த்துக் கொண்டிருப்பதாக அவனுக்குத் தோன்றியது. அப்போதுதான் அதுவரை அங்கேயே நின்று கொண்டிருந்த, கண்ணாடி அணிந்த, உதவியாளர் போல் காட்சியளித்த மனிதரைக் கவனித்த மாமா மூர்த்தியிடம் சொன்னார்.

''இவர் லாரென்ஸ். நமக்கு பி.ஏ. மாதிரி இருக்கிறவர்.'' மூர்த்தி அவர் பக்கம் திரும்பி மெலிதாகப் புன்னகை செய்தான்.

''சரி. நீ போகலாம்'' என்று லாரென்ஸை அனுப்பி வைத்தார் மாமா. சேர்மன், மாமாவைப் பார்த்துப் பேசினார்.

''லாரென்ஸ் இடத்துக்கு மச்சினனைக் கொண்டாந்திருக்காப் போலவா?''

மாமா சிரித்தார். சத்தமான பெருஞ் சிரிப்பு அது! அட்டகாசம் என்பார்களே அந்த வகையைச் சேர்ந்தது அது. வெற்றிப் பெருமிதம் என்பார்களே, அந்த வகை உணர்வுகளைச் சொல்லும் சிரிப்பு அது!

''சரி. மூர்த்தி.. பயணம் எல்லாம் சௌகரியமாய் இருந்ததா?''

''இருந்தது மாமா.''

''உம்... இப்ப ஏது ரயிலு உனக்கு?''

''திருவள்ளுவர்லே வந்தேன்.''

''அப்பப்பா! பஸ் பயணம் இப்பல்லாம் நமக்கு ஒத்துக்கறதே இல்லை. ஐயோ... செத்தே போயிடுவேன். 'பிளைட்' இருக்கே, சௌகர்யமா...''

என்ன காரணத்தாலோ, மாமாவின் பழைய வாழ்க்கை — அவன் அப்பா மூலம் அவன் தெரிந்து கொண்ட பழைய வாழ்க்கை — அவன் நினைவுக்கு வந்தது. கருப்பட்டி வெல்லத்தைச் சைக்கிள் கேரியரில் அம்பாரமாக ஏற்றிக் கொண்டு, பன்னிரெண்டு ஊர்களுக்குக் காலை முதல் மாலை வரை சைக்கிளை மிதித்துச் சப்ளை செய்தவர் அவர் என்பது அசந்தர்ப்பமாக அவனுக்குத் தோன்றியது.

''அப்பா அம்மாவெல்லாம் சௌக்கியமா?''

''இருக்காங்க...''

''சரி... சேர்மன். இருங்க... வர்றேன்'' என்று எழுந்தார் மாமா. மூர்த்தியைப் பார்த்து ''வா'' என்றார்.

அவன் அவரைப் பின்தொடர்ந்தான்.

**மா**டியில் அவனுக்காக ஒதுக்கியிருந்த அறையை அவர்கள் அடைந்தார்கள்.

''இதுதான் உன்னுடைய அறை'' என்றார் மாமா.

அறை என்பது உபசாரமாகச் சொன்னாலும், ஒரு சிறிய வீட்டைப் போல் இருந்தது அது. ஜன்னல் ஓரம் மெத்தை விரிக்கப்பட்ட கட்டில். அறையை ஒட்டிய பாத்ரூம். துணிமணிகள் வைக்க பீரோ. எழுது மேஜை, மற்றும் சாப்பாட்டு மேஜை என அனைத்தும் கொண்டதாய்க் கச்சிதமாக அலங்கரிக்கப்பட்டிருந்தது அது.

''நான் அடுத்த அறையில் தங்கிக் கொள்கிறேன். நீ என் பக்கத்திலேயே இருப்பது எனக்குச் சௌகர்யம். சரி, குளி. ரெடியாயிடு. நாம் வெளியே சாப்பிடப் போகிறோம்... அப்புறம் சாவகாசமாகப் பேசிக் கொள்கிறோம்.''

மாமா புறப்பட்டுப் போனார்.

குளித்து முடித்து ஆடை அணிந்து கொண்டு புறப்படத் தயாரானான் அவன். அதே சமயம் மாமாவும் அவனை அழைத்து வரச் சொல்லி லாரென்ஸை அனுப்பி வைத்தார்.

**அ**வர்கள் சென்ற கார் ஒரு பெரிய ஹோட்டலின் போர்ட்டிகோவில் வந்து நின்றது.

மாமா அது ஒரு ஸ்டார் ஹோட்டல் என்று கூறி அதன் பெயரையும் உச்சரித்தார். வெளியே பிரகாசமாக இருந்த அந்த ஹோட்டல், 'பாரு'க்குள் இருண்டிருந்தது. மேஜைக்கு மட்டும் வெளிச்சம் விழுந்து. இதமான குளிரும், மிதமான சங்கீதமுமாகச் சூழல் மிக ரம்மியமாக இருந்தது.

அவர்கள் ஒரு மேஜையில் அமர்ந்ததும் மாமா கேட்டார்.

''நீ டிரிங்க் பண்ணுவியா?''

''சேச்சே. நான் பண்ணுவதில்லை மாமா.''

''நல்லது. குடிக்காமல் இருப்பது நல்லது. 'பீர்' மட்டும் சாப்பிடலாமே. பீர் பெண்கள் பானம்.''

''அது என்ன பெண்கள் பானம்?''

''அவ்வளவு மென்மையாக இருக்கும்.''

இருவரும் சிரித்தார்கள்.

''பெண்கள் மென்மையானவர்கள் என்று யார் மாமா உங்களுக்குச் சொன்னது? அவர்களைக் காட்டிலும் வன்மையானவர்கள் இல்லை, தெரியுமா? சும்மா வீட்டில் இருந்து கொண்டு, சமைத்துப் போட்டுக் கொண்டு இருப்பதைக் கொண்டு அந்த முடிவுக்கு வந்து விடக் கூடாது. சர்க்கஸ் யானை பந்து விளையாடி, நாற்காலியில் சிரமப்பட்டு உட்கார்ந்து வேடிக்கை காட்டிக் கொண்டிருக்கிறது என்பதனால் யானைக்கு அதன் பலம் போய் விடுமா என்ன? நம் பெண்களும் சர்க்கஸ் யானை போன்றவர்கள்.''

மாமா அவனை வித்தியாசமாகப் பார்த்தார்.

''உம். பரவாயில்லை. உன்னை என்னமோ என்று நினைத்தேன்.''

வெயிட்டரிடம், ''முதலில் ஒரு லார்ஜ்'' என்று ஆர்டர் செய்தார்.

வேர்க்கடலை, உருளைக்கிழங்கு சிப்ஸ், பட்டாணி சுண்டல், கார அப்பளம் என்று வந்த தின்பண்டங்களைக் கொறித்துக் கொண்டு அமர்ந்திருந்தான் மூர்த்தி.

''அப்புறம். நீ என்னவாக விரும்புகிறாய்? முதலில் உன் நோக்கத்தைச் சொல்.''

''நோக்கம் என்ன மாமா? ஏதாவது ஒரு நல்ல வேலையாகப் பார்க்க வேண்டும். அவ்வளவுதான்.''

மாமா ஒரு மிடறு விஸ்கியை விழுங்கி விட்டு, ஒரு சிப்ஸ் துண்டத்தைக் கடித்துக் கொண்டு சொன்னார்.

''என்ன பெரிய வேலை? சம்பளம் அதிகம் போனால் இரண்டாயிரம் கிடைக்குமா? அதை நான் தருகிறேன். தமிழன் புத்தியே, ஒண்ணாம் தேதி சம்பளம். அதிகம் போனால் ஐயாயிரம் மாதச் சம்பளம். கடன் வாங்கி வீடு என்பதிலேயே குறுகிப் போய் விட்டது. நீயும், நத்தை மாதிரி சுருங்கிச் சுருங்கித்தான் வாழ ஆசைப்படுகிறாயா?''

''வேலை ஏதாவது செய்ய வேண்டுமே மாமா?''

''எனக்குப் பி.ஏ.வாக இரு. மாதம் இரண்டாயிரம் ரூபாய் வீட்டுக்கு நான் அனுப்பி வைக்கிறேன். கவலைப்படாமல் இரு. உன்னை என்னிடம் ஒப்புக் கொடுத்து விடு. உன் வாழ்க்கையைப் பற்றிக் கவலைப்பட நான் இருக்கிறேன்.''

''அப்பாவைக் கேட்க வேண்டும் மாமா.''

''அதை நான் பார்த்துக் கொள்கிறேன்.''

லாரன்ஸ் என்கிற அந்த மனிதரைப் பி.ஏ.வாக தனக்கு அறிமுகப்படுத்தியது அவனுக்கு நினைவுக்கு வந்தது.

''லாரன்ஸைப் பி.ஏ. என்று எனக்கு அறிமுகப்படுத்தி வைத்தீர்களே, அவரை என்ன செய்யப் போகிறீர்கள்?''

மாமா கிளாஸைக் காலி செய்தார். வேர்க்கடலையை அள்ளி வாயில் போட்டுக் கொண்டார். திரும்பிச் சுற்று முற்றும் பார்த்துக் கொண்டார். சொன்னார்.

''லாரன்ஸ் நம்பகமானவன்தான். ஆனாலும் அவன் நம்ம ஜாதி இல்லை. உனக்குத் தெரியுமோ, என்னவோ. நம்ம கல்வி அமைச்சரோட ஜாதி அவன். கல்வி அமைச்சர் நம் கோஷ்டி இல்லை. நமக்கு எதிராய் இருக்கிறார். செண்ட்டிமெண்ட்டுகளிலேயே ஆழமான செண்ட்டிமேண்ட்டே இந்த ஜாதிதான். ஏதானும் ஏசகு பிசகா இந்தப் பயல் அவர் கட்சிக்குத் தாவி விடக் கூடும். அவரே அவனை இழுக்க முயலுவார். எதுக்கு வம்பு? ஆரம்பத்திலிருந்தே ஜாக்ரதையாக இருப்பது நல்லது அல்லவா?''

''லாரன்ஸை வேலையைவிட்டே அனுப்பி விடுவீர்களா?''

''நான் அனுப்ப மாட்டேன். அவனாகப் போய் விடுவான்.''

மூர்த்தி ஆச்சர்யத்துடன் கேட்டான்.

''எப்படி மாமா?''

''அவன் நல்லவன். வேலையை ஒழுங்காகச் செய்கிறவன். ஆகவே, அவனுக்கு ரோஷமும் மானமும் அதிகமாக இருக்கும். அதைத் தொட்டால் அவனால் தாங்க முடியாது. அவன் போய் விடுவான்.''

''பாவம் மாமா.''

''உலகத்தில் யார் பாவம் இல்லை?''

அவர்கள் ரெஸ்ட்டாரெண்டுக்குச் சென்றார்கள். உள்ளே நுழைந்ததும் ''மிஸ்டர் தேவசகாயம்'' என்று ஒரு குரல் மாமாவை விளித்தது. மூர்த்தி திரும்பினான். நடு வயது என்று தெரிந்தும் தெரியாமலும் அதீத மேக்கப்பில் ஒரு பெண்மணியும், அவளுக்கு அருகே அவளே இருபது வயது குறைந்து விட்டாற் போல, அவளையே வார்த்து எடுத்த மாதிரி தோற்றமளித்த ஓர் இளம் பெண்ணும் ஓர் இடத்தில் அமர்ந்திருந்தார்கள்.

அந்த முதியவளை எங்கோ அடிக்கடி பார்த்த மாதிரி இருந்தது மூர்த்திக்கு. நினைவை அழுத்தமாகத் தேய்த்துக் கொண்டான். பளீரென்று நினைவுக்கு வந்தது. சில ஆண்டுகள் முன் வரை மிகப் பிரபலமாக இருந்த சினிமா நட்சத்திரம் கோகிலா அவள்.

(தொடரும்)



''எதுக்கு சார்... முகத்தைத் திருப்பிக்கிட்டு லஞ்சம் வாங்கறீங்க...?''

''என்ன பண்றது...? இவ்வளவு குறைச்சலா லஞ்சம் வாங்கறதை நினைச்சா எனக்கே வெட்கமா இருக்கு...!''

— இம்ரான்கான்.



• குவி ஃபெங்லிங்

# பெண்ணாய்ப் பிறப்பது பாவமா?

பெண் குழந்தை பிறந்து விட்டதே என்று வருந்துகிறவர்கள் இந்தியாவில் மட்டுமல்ல; சீனாவிலும் உண்டு! 'ஆண் மக்களான தங்களை இந்த உலகுக்குக் கொண்டு வந்ததே பாக்கியசாலிகளான பெண்கள்தாம் என்பதை ஆண் வர்க்கம் மறந்து விடுகிறது. இந்தச் சூழலில் 'ஒரு குழந்தை, ஒரே குழந்தை' என்ற கம்யூனிஸ்ட் சீன அரசின் கொள்கை பல தாய்மார்களுக்குப் பெரிய துன்பமாக முடிகிறது. பிறப்பது ஆண் குழந்தையானால் சரி; பெண் குழந்தையானால் தாய், கைக்குழந்தையுடன் வீட்டை விட்டு விரட்டப்படுகிறாள்! அவ்வாறு விரட்டப்பட்ட குவி ஃபெங்லிங் என்ற பெண்மணி, அண்மையில் சீனத் தலைநகரில் ஓர் அரசு அலுவலகத்தின் முன் கண்ணீரும் கம்பலையுமாக, கையில் குழந்தையுடன் நின்று, தன் கணவனும் மாமியாரும் செய்கிற கொடுமைகளுக்கு எதிராக நியாயம் கேட்டாள்.

— ஹிந்து நாளிதழ் 14.12.88.

**சோ**ஷலிஸ சமுதாயத்தை அமைத்து எல்லோரும் சமம் என்று போதிக்கும் சீனாவிலேயே பெண்களின் நிலை இப்படி இருக்கிறதே என்று இச்செய்தியைப் படிக்கும் பலர் ஆச்சரியப்படலாம்; வேதனை அடையலாம். ஆனால், சீனத்தின் வரலாற்றை அறிந்த எவருக்கும் இது வியப்பான செய்தியாக இராது.

அகிலம் முழுவதும் 'யின்' — 'யாங்' என்ற இரு தத்துவங்களாலேயே ஆளப்படுவதாகச் சீனர்கள் தொன்மைக்காலம் முதல் நம்பி வந்திருக்கிறார்கள். இவற்றில் இருளும் பலவீனமும் செயலற்ற தன்மையும் கொண்டதான 'யின்' பெண் தன்மை உடையது என்றும் ஒளியும் வலிமையும், செயல்திறனும் கொண்ட 'யாங்' ஆண் தன்மை உடையது என்றும் கருதினார்கள். இந்தத் தத்துவத்தின் அடிப்படையில்தான் கன்ஃபூஷியஸின் கொள்கைகளும் அமைந்தன. அவர் பெரிய ஞானியாகப் போற்றப்படுகிறார் என்றாலும் இந்த அடிப்படை குறித்து அவர் சிந்திக்காமல் அப்படியே ஏற்றுக் கொண்டதில் பெண் அடிமைத்தனத்துக்கு வித்திட்டவராகி விட்டார். பெண் எப்போதும் அடங்கி நடக்க வேண்டியவளே, பொது விஷயங்களில் தலையிடக் கூடாதவள் என்ற கருத்து வேரூன்றியது. அடுத்தடுத்து வந்த பல சிந்தனையாளர்களும் இந்த அடிப்படையை அப்படியே ஏற்றுக் கொண்டு பெண்மைக்கு இலக்கணம் வகுத்தார்களே தவிர, இந்த அடிப்படையை உடைத்தெறிய யாரும் எண்ணவில்லை. பெண் என்பவள் இளமையில் தந்தையிடமும் திருமணத்துக்குப் பின் கணவனிடமும் விதவையானால் மகனிடமும் பணிவுடன் நடந்து கொள்ள வேண்



• இலைவதி

டியவளானாள். கன்ஃபூஷியஸின் கொள்கைகள் வேரூன்ற இத்தகைய நூல்கள் உதவி, செல்வாக்கும் பெற்றன. பெண் கல்வி முற்றாய் ஒழிந்தது. சிறிய பாதங்களே அழகு என்பதால் அவள் பாதங்களை இறுகக் கட்டி வைக்கும் கொடிய வழக்கம் தோன்றியது. பெண், மூதாதையருக்கான வழிபாடுகளைச் செய்யலாகாது என்ற விதிமுறை பெண் குழந்தை பிறப்பதிலே எவரும் மகிழ முடியாமல் செய்துவிட்டது. பெண்ணின் திருமணம் குடும்பத்துக்குப் பெரிய செலவாக விளங்கியது. பல தருணங்களில் குழந்தைகளின் எண்ணிக்கையைக் குறிப்பிடும் தகப்பன் பெண் குழந்தைகளைக் கணக்கிலேயே எடுத்துக் கொள்ள மாட்டான்! பெண் குழந்தைகள் பிறந்ததும் கொல்லப்படுவதும் வீட்டு வேலைகளுக்காகவோ விபசாரத்துக்காகவோ விற்கப்படுவதும் பல சமயங்களில் நடந்தன. 'மனைவி என்பவள் விலைக்கு வாங்கப்பட்ட ஒரு மட்டக் குதிரையே! அவளைச் சவாரி செய்வதும் சவுக்கால் அடிப்பதும் கணவனின் உரிமை' என்கிறது ஒரு சீனப் பழமொழி! பெண்களுக்குப் பாதுகாப்புத் தரும் சட்டங்கள் உருவாக்கப்படவில்லை.

இவ்வளவு இருந்தபோதிலும் பெண் உரிமைகளுக்காகப் போராடும் இலக்கியங்களும் தோன்றின. அவை ரகசியமாகப் படிக்கப்பட்டன. அல்லிக் கழகம் ' என்பது போன்ற பல பெயர்களில் பெண்களின் இரகசிய இயக்கங்கள் உருவாயின. பெண் அடிமைத்தனத்துக்கு எதிரான குரல் படிப்படியாக உயர்ந்து, பதினெட்டாம் நூற்றாண்டின் பிற்பகுதியிலிருந்தே பகிரங்கமாக வலிமை பெற ஆரம்பித்தது. பெண் கல்விக்குப் பள்ளிகள் தோன்றின. பாதங்களைப் பிணைப்பதற்கு எதிர்ப்புத் தோன்றியது. போர்ப்படைகளில் பெண்கள் சேர்ந்தனர். கலாசாரப் புரட்சிக்குப் பின் 1922 — இல் பெண்கள் வோட்டுரிமைக்காகப் போராடினர். வலிமைமிக்க மகளிர் இயக்கங்கள் தோன்றின. பெண்களுக்கு வேலை வாய்ப்பு பெருகியது. நாட்டை ஆள்கிற அமைப்புகளில் பெண்களுக்குப் பிரதிநிதித்துவம் கிடைத்தது.

ஆயினும், சோஷலிஸ சமுதாயத்தை அரசியல் ரீதியாக நிறுவியதன் மூலமாக, நூறு நூறு ஆண்டுகளின் ஆண் ஆதிக்க மனப்பான்மைகள் தாமாய் அழிந்து விடாது தான். அந்தநிலை இன்னும் ஓரளவு உள்ளது. மாறுதலைக் கொண்டு வருவதில் மிகச் சிரமமான பகுதி குடும்பச் சூழலே. சமூகம் மாறி விட்ட போதிலும் சில குடும்பங்களில் பாரம்பரிய மூட எண்ணங்கள் இன்னமும் வேரூன்றியுள்ளன. அங்கேயும் ஒரு மாறுதலைக் கொண்டு வரத்தான் குயி ஃபெங்லிங் என்ற அந்தப் பெண்மணி பெய்ஜிங் நகர அரசு அலுவலகம் முன் போர்க்கொடி உயர்த்தினாள் போலும்!

— திலகவதி.







— ஜெ. மகேஷ்.



— இம்ரான்கான்

# ஒரு தொகுதியில் தேர்தல் நடக்கிறது

அன்றைய நாளிதழைப் பார்த்த தேவுனுக்கு ஒரே அதிர்ச்சி. தான் சார்ந்திருக்கும் மக்கள்நலக் கட்சி வெளியிட்டிருந்த வேட்பாளர் தேர்வுப் பட்டியலில் அவனது பெயர் இடம்பெறவில்லை. சென்ற இரு தேர்தல்களின் போதும் உள்ளூர்ப் பத்திரிகைகளின் ஹேஷ்யங்களும், கட்சி வட்டாரத்தில் நிலவிய பேச்சுக்களும் அந்தத் தொகுதிக்குத் தேவன்தான் கட்சியின் வேட்பாளராகத் தேர்வு செய்யப்படுவான் என்பதை உறுதி செய்திருந்த போதிலும், என்ன காரணத்தினாலோ இறுதியில் வேறு நபர்களைக் கட்சி மேலிடம் தேர்வு செய்து தேர்தலில் நிறுத்தியது. அவனும் கட்சி முடிவை ஏற்றுக் கட்சியின் வெற்றிக்காக உழைத்திருந்தான். 'மக்களின் நல்வாழ்வுக்காகப் பாடுபடுவேன்' என்று கூறி ஜெயித்தவர்கள், தம் மனைவி மக்கள் நல்வாழ்வுக்காக, ஏராளமாய்ப் பணத்தையும் சொத்துக்களையும் சேர்த்துக் கொண்டனரே தவிர, தொகுதி மக்களுக்காக ஒன்றும் செய்திருக்கவில்லை.

தேவன்... ஆரம்ப காலம் முதல் கட்சிக்காக விசுவாசமாய் உழைத்து வருபவன். ரொம்பவும் நல்லவன். இல்லற வாழ்வில் ஈடுபடாமல் தன் ஆத்ம நண்பன் ரவிசேகரனுடன் சேர்ந்து சமூகப் பணிகளுக்காகத் தன்னை முழுமையாக அர்ப்பணித்துக் கொண்டவன். அத்தொகுதி மக்களின் நன்மதிப்பைப் பெற்றவன்.

இந்த முறை தன்னைத்தான் வேட்பாளராகக் கட்சி அறிவிக்கும் என்று நம்பியிருந்த தேவனுக்கு, அந்தத் தொகுதிக்குக் கட்சியின் வேட்பாளராக அருணகிரியின் பெயர் அறிவிக்கப்பட்டிருந்ததைப் பார்த்ததும் பெருத்த ஏமாற்றம்.

அருணகிரி வேறு யாருமில்லை; தேவனின் உடன்பிறந்த தம்பிதான்! தேவனை வஞ்சித்துத் தாயிடமிருந்த எல்லாச் சொத்துக்களையும் வன்முறையில் எழுதி வாங்கியபின், தாயை வீட்டை விட்டுத் துரத்தியது மட்டுமல்லாது, அவள் இறந்த போது வாய்க்கரிசி போடக் கூட வர மறுத்தவன். சட்டத்துக்கு விரோதமாகப் பல 'அண்டர்கிரவுண்ட்' வேலைகளிலும் ஈடுபட்டு வருபவன்.

இப்படிப்பட்ட ஒருவனா இத்தொகுதிக்குக் கட்சியின் வேட்பாளன்? கூடாது! தொகுதி மக்களின் ஆசைகளும் அபிலாஷைகளும் நிறைவேற வேண்டுமானால், மக்களின் கோரிக்கைகளும் குறைகளும் தீர்க்கப்பட வேண்டுமானால், தான் தேர்தலில் போட்டியிட வேண்டும் என்ற முடிவுக்கு வந்தான் தேவன்.

நண்பன் ரவிசேகரனைச் சந்தித்து ஆலோசனை கேட்கலாம் என்று அவன் வீட்டை நோக்கி விரைந்தான். ரவிசேகரன் நாளிதழை முன்னரே பார்த்து விஷயத்தை அறிந்திருந்தான். தான் தேர்தலில் போட்டியிட முடிவு செய்திருப்பதாகத் தேவன் கூறியவுடன், ஒத்த சிந்தனையிலிருந்த ரவிசேகரனும் அவனது முடிவை வரவேற்றான்.

மறுநாள் கட்சியின் பெயரிலேயே போட்டி வேட்பாளராகத் தன் வேட்பு மனுவைத் தாக்கல் செய்தான் தேவன்.

"ஏங்க... கட்சிக் கட்டளையையும் மீறி, உங்கண்ணனேப் போட்டி வேட்பாளரா — உங்களுக்கு எதிரா மனு தாக்கிது பண்ணியிருக்காரே... நீங்க ஏன் நேரில் பார்த்து அவரைத் தம் வேட்பு மனுவைத் திரும்பப் பெறச் சொல்லக் கூடாது?" — கேட்டது கட்சியின் வட்டத் தலைவர்.

"நாளைக்கு வேட்பு மனு திரும்பப் பெறக் கடைசி நாள். நாளைக்கு அவன் வாபஸ் வாங்கவில்லைன்னா கட்சிக் கட்டுப்பாட்டை மீறிட்டான்னு சொல்லிக் கட்சியிலிருந்து அவனை நீக்கிவிடப் போறாங்க. அப்புறம் கட்சி சப்போர்ட்டும் இல்லாம, கையில் பணமும் இல்லாம எலெக்ஷன்ல நின்னு என்னத்தைக் கிழிக்கப் போறான் அந்த வெற்றுப் பய?" என்றான் அருணகிரி.

"புரியாம பேசறீங்க... உங்கண்ணன் தேவன் சமூக சேவை அது இதுன்னு செய்து ஊரில நல்ல பேரு எடுத்திருக்காரு. அது போக அவருக்குப் பெண்டாட்டி பிள்ளைங்க கிடையாது. தனி மனுசன். அதனால

பாளை. செல்வகணேசன்

மத்தவங்க மாதிரி ஊரைக் கொள்ளையடித்து உலையில போடமாட்டார்ன்னு ஜனங்ககிட்ட அவர்மேல் நம்பிக்கை இருக்கு. நிச்சயமா உங்களுக்கு விழப்போகிற வோட்டுக்களில் கணிசமான அளவு பிரிஞ்சிடும். அப்புறம் அவர் ஜெயிக்கிறாரோ, இல்லையோ நீங்க ஜெயிக்கிறது ரொம்பக் கஷ்டமாயிடும். மாற்றுக் கட்சியினர் வெற்றி பெற ஏதுவாயிடும். நான் சொல்றதைச் சொல்லிவிட்டேன். அப்புறம் உங்க பிரியம்.''

வட்டத் தலைவர் சொன்னதிலிருந்த உண்மை மனத்தில் உறைக்க, அடுத்த பத்தாவது நிமிடம் தேவனின் வீட்டிலிருந்தான் அருணகிரி.

''அண்ணே... என்னைத்தான் வேட்பாளராகக் கட்சி அறிவிச்சிருக்கு. ஆகையால் உன்னுடைய வேட்பு மனுவைத் திரும்பப் பெற்றுக்கணும். இல்லைன்னா கட்சிக்கட்டுப்பாட்டை மீறினதாச் சொல்லி உன்மேல் ஒழுங்கு நடவடிக்கை எடுத்திடுவாங்க... தெரியும்ல!'' — குழைவான குரலில் சொன்னான்.

''நல்லாத் தெரியும். யாரோ முகந்தெரியாத ஒரு புது நபரைக் கட்சி நிறுத்தியிருந்தால்கூட என்னோட முடிவு வேறாக இருந்திருக்கும். ஆனால் உன்னை என்னால் கட்சியோட வேட்பாளராக ஒரு காலும் ஏத்துக்க முடியாது. ஏன்னா, உன்னோட அயோக்கியத்தனத்தை, அட்டூழியங்களை முழுமையாக அறிந்தவன் நான். பெற்ற தாயையும், உடன் பிறந்த சகோதரனையும் வஞ்சித்த உன்னால் எப்படிப் பொது மக்களுக்கு மட்டும் உண்மையான ஊழியம் செய்ய முடியும்? உனக்கிருக்கும் பணபலம், கட்சியின் ஆதரவு இவற்றுக்கு முன்னால் உன்னை எதிர்த்து நான் ஜெயிக்கிறது முடியாத ஒண்ணுதான். ஆனாலும் நல்லது செய்த முயற்சியில் கிடைக்கிற தோல்விகூட எனக்கு ஆத்ம திருப்தியைத்தான் தரும். என்னைக் கட்சியைவிட்டு நீக்கினாலும் சரி... நான் வேட்பு மனுவை வாபஸ் பெற மாட்டேன். நீ போகலாம்.''

தேவனின் பதிலில் இருந்த உறுதியைப் பார்த்த அருணகிரி மறுமொழி ஏதும் பேசாமல், இடத்தைவிட்டு நகர்ந்தான்.

தேவன் தான் சொன்னது போலவே



தன்னுடைய வேட்பு மனுவைத் திரும்பப் பெறவில்லை. ஆனால் தேவனே எதிர் பார்த்திராத வண்ணம், அருணகிரி தன் வேட்பு மனுவைத் திரும்பப் பெற்றிருந்தான். அன்று மாலை தேவனையே அதிகாரபூர்வ மான வேட்பாளராகக் கட்சி அறிவித்தது அவனுக்கு ஆச்சரியத்தையும் ஆனந்தத்தை யும் தந்தது.

அன்றிரவு தன் வீட்டு மாடியில் அமர்ந்து தேர்தல் பிரசாரப் பணிகள் குறித்து ரவிசேகரனுடன் தேவன் பேசிக் கொண்டி ருந்த சமயம், அவன் வீட்டுக்கெதிரே இருந்த மகாதேவன் கோயில் மணி ஒலித்தது.

அந்தக் கோயில் தெய்வத்தின் பெயர்தான் தனக்கும் என்பதாலோ கோயில் தன் வீட்டுக்கு எதிரில் இருக்கிறது என்பதாலோ வெள்ளிக்கிழமை தோறும் கோயிலுக்குச் சென்று வழிபடுவான் தேவன். ரவிசேகரன் இந்த விஷயத்தில் தேவ னிடமிருந்து மாறுபடுவான். அவன் நாத்தி கன் இல்லைதான் என்றாலும் கோயில்களுக் குச் சென்று வழிபட மாட்டான்.

அந்தக் கோயில் மணியோசையைக் கேட்ட போதுதான், தேவனுக்கு வழக்கமாய் வெள் ளிக்கிழமையன்று கோயிலுக்குப் போகும் தான், அன்று போகாதது நினைவுக்கு வந்தது. உடனே ரவிசேகரனிடம் கூறிவிட்டு அவசரமாய்க் கோயிலுக்குப் போனான்.

சற்று நேரத்திற்கெல்லாம் அவன் கோயி லிலிருந்து வெளிவரவும், ஒரு அம்பாஸிடர் கார் அவனை ஒட்டினாற்போல் வந்து நின் றது. காரிலிருந்து கைகளில் பயங்கரமான ஆயுதங்களுடன் இறங்கிய நான்கு ஆஜானு பாகுவான மனிதர்கள் தேவனைச் சுற்றி வளைத்து நின்றனர். கண்ணிமைக்கும் நேரத் திற்குள், அவர்கள் அவனைச் சரமாரியாகத் தாக்கத் தொடங்கினர். தேவனின் வீட்டு மாடியிலிருந்த ரவிசேகரன் சப்தம் கேட்டுப் பதறியடித்துக் கொண்டு மாடியிலிருந்து இறங்கி வீட்டைவிட்டு வெளியே ஓடி வந் தான். குறுக்காக நின்ற காரைத் தாண்டித் தேவனை அவன் நெருங்கும் போது, இருட் டான பகுதியில் நின்ற அந்தக் காரிலிருந்து, ''சரி போதும்... வண்டியில் ஏறுங்கடா... யாரோ வர்றாப்பல தெரியுது'' என்று வெளிப்பட்ட குரல் அவனது காதில் தெளி வாக விழுந்தது. அந்தக் குரல் ரவிசேகர னுக்குப் பரிச்சயமான குரல்தான். ஆம்... அது அருணகிரியின் குரல். இந்த வேலை களெல்லாம் அவனுடையதுதான் என்பது ரவிசேகரனுக்குப் புரிய அதிகநேரமாக வில்லை. அந்த நான்கு பேரும், காரில் ஏற வும், கார் சட்டென்று அந்த இடத்தை விட்டு மறைந்தது. ரவிசேகரன் தேவன் அருகில் வருவதற்குள், அவனது உயிர் பிரிந்திருந்தது.

வேட்பாளர் இறந்துவிட்ட காரணத்தி னால், அத்தொகுதியில் தேர்தல் நிறுத்தி வைக்கப்படுவதாக மறுநாள் காலையில் அறி விக்கப்பட்டது.

மாலையில் தேவனின் உடல் மீது மலர் வளையம் வைத்துக் கதறி அழுத அருணகிரி யைப் பார்த்த ரவிசேகரன் உள்ளம் குமுறி னான். அப்பொழுது நடந்த போலீஸ் விசா ரணையின் போது, தன் கண்ணால் கண்ட தையும், காதால் கேட்டதையும் சொல்லித் தேவனின் கோர மரணத்திற்குக் காரணம் அருணகிரிதான் என்று தைரியமாய்ச் சாட்சி கூறினான் ரவிசேகரன்.

ஆனாலும், சம்பவம் நடந்த அன்று தான் சென்னையில் கட்சித் தலைவருடன் தொகுதி நிலவரம் குறித்துப் பேசிக் கொண் டிருந்ததாகக் கூறினான் அருணகிரி. அதை உறுதி செய்யும் பொருட்டுக் கட்சித் தலைவ ரையே அழைத்து வந்து சாட்சியம் சொல்ல வைத்துத் தன்னை அந்த வழக்கிலிருந்து விடுவித்துக் கொண்டான். அதன் பின்னர் தேவன் கொலை வழக்கு என்னவா யிற்று என்று ரவிசேகரனுக்குத் தெரியாது.

இரண்டு மாதங்கள் கழித்து மீண்டும் அத்தொகுதியில் தேர்தல்.

மக்கள் நலக் கட்சியின் சார்பாக அருண கிரி போட்டியிட்டான்.

'பொது வாழ்வுக்காகத் தன்னை அர்ப்ப ணித்துப் பிறருக்காக வாழ்ந்த சமூகத் தொண்டனும், எதிரிகளின் வஞ்சகத்தால் தன் இன்னுயிரை நீத்த மனிதப் புனிதனான தேவனின் அன்புத் தம்பியுமான அருண கிரி, உங்களுக்கு ஊழியம் செய்ய வாக் களியுங்கள்' என்ற வாசகத்துடனும், இரத்த வெள்ளத்தில் கொலையுண்டு கிடந்த தேவ னின் புகைப்படத்துடனும், கூடிய போஸ்டர் கள் ஊரெங்கும் ஒட்டப்பட்டன. மாற்றுக் கட்சியினரின் வன்செயலே தேவனின் கோர மரணத்திற்குக் காரணம் என்பதையே பிர தானமாக வைத்துத் தேர்தல் பிரசாரம் செய் தான் அருணகிரி.

இறுதியில், எதிர்த்துப் போட்டியிட்ட அத் தனை பேரையும் டெபாஸிட் இழக்கச் செய்து, பல்லாயிரக்கணக்கான வாக்குகள் வித்தியாசத்தில் அந்தத் தேர்தலில் அவன் வெற்றி பெற்றான்.

தேவனை மையமாக வைத்துப் பிர சாரம் செய்து, தான் வெற்றி பெற்றதாலோ என்னவோ, தேவனின் வீட்டின் முன் அவன் சிலையை நிறுவ ஏற்பாடு செய்திருந் தான் அருணகிரி.

அன்று தேவனின் சிலை திறப்பு விழா. அருணகிரி ஜெயித்த பிறகு, தொகுதியில் கலந்து கொள்ளும் முதல் நிகழ்ச்சியாக இருந்தமையால் விழா அமர்க்களமாக ஏற் பாடு செய்யப்பட்டிருந்தது. கட்சியின் மாவட் டச் செயலாளர் தலைமை வகித்தார்.

''தம் இறுதிநாள் வரை சமூக சேவைக் கென வாழ்ந்தவர் தேவன். அவருடைய தம்பியாகப் பிறந்தது, நான் செய்த பெரும் பேறு'' என்று உணர்ச்சிபூர்வமாகப் பேசித் தேவனின் சிலையை அருணகிரி திறந்து வைத்தான்.

# பொன்னியின் செல்வன்

## அத்தியாயம் 15
## இராஜோபசாரம்

கடம்பூர் சம்புவரையர் மாளிகையின் முன் வாசல் அன்று மாலை கண்டறியாத அற்புதக் காட்சிகளைக் கண்டது. கண்ணுக் கெட்டிய தூரம் ஜனங்கள் திரள் திரளாக நெருக்கியடித்துக் கொண்டு நின்றார்கள். ஆண்களும் பெண்களும் சிறுவர்களும் சிறுமிகளும் வயோதிகர்களும் அக் கூட்டத்தில் இருந்தார்கள்.

திடமாகக் காலூன்றி நிற்கவும் முடியாத கிழவர்களும் கிழவிகளும் கோலூன்றி நின்றார்கள். தாங்கள் பிறரால் அங்குமிங்கும் தள்ளப்படுவதைப் பொருட்படுத்தாமல் அவர்கள் ஆதித்த கரிகாலரின் வீரத் திருமுகத்தைப் பார்க்கும் ஆர்வத்தினால் தள்ளாடிக் கொண்டு நின்றார்கள். சிறுவர் சிறுமியர் தாங்கள் ஜனக் கூட்டத்தின் நடுவே நசுக்கப்படுவதைப் பொருட்படுத்தாமல் முண்டியடித்துக் கொண்டு முன்னால் வர முயன்று கொண்டிருந்தார்கள். யௌவனப் பெண்கள் தங்களுக்கு இயற்கையான கூச்சத்தை அடியோடு கை விட்டு அன்னிய புருஷர்களின் கூட்டத்தினிடையே இடித்துப் பிடித்துக் கொண்டு முன்னால் வரப் பிரயத்தனம் செய்தார்கள். யௌவன புருஷர்களோ, அத்தகைய இளம் பெண்களைச் சிறிதும் இலட்சியம் செய்யாமல், அவர்களின் மீது கடைக் கண் பார்வையைக் கூடச் செலுத்தாமல், இளவரசரை நன்றாகப் பார்க்கக் கூடிய இடங்களைப் பிடிப்பதிலேயே கவனம் செலுத்தினார்கள். அவர்களில் பலர் கடம்பூர் மாளிகைக்கு எதிரிலும் பக்கங்களிலும் உள்ள மரங்களின் மீதெல்லாம் ஏறிக் கொண்டிருந்தார்கள். இன்னும் அநேகர் அந்த மாளிகையின் வெளி மதில் சுவரின் பேரிலும் ஏற முயன்று, அரண்மனைக் காவலர்களால் கீழே இழுத்துத் தள்ளப்பட்டார்கள்.

பச்சைக் குழந்தைகளை இடுப்பில் வைத்துக் கொண்டு இளம் பெண்கள் எத்தனையோ பேர் அக் கூட்டத்தில் பல இன்னல்களை அனுபவித்துக் கொண்டு நின்றார்கள். அழுத குழந்

அமரர் கல்கி

தைகளிடம் அவற்றின் தாய்மார்கள் "கண்ணே! அழாதே! வீரத் தமிழகத்தின் மகா வீராதி வீரர் — 'வீர பாண்டியன் தலை கொண்ட' ஆதித்த கரிகால சோழர் வரப் போகிறார்! அவரைப் பார்க்கும் பேறு பெற்றால் நீயும் ஒரு நாள் அவரைப் போல் வீரனாவாய்!" என்று சொல்லிச் சமாதானப்படுத்த முயன்றார்கள். இம்மாதிரியே காதலர்கள் தங்கள் காதலிகளிடமும் தந்தைமார்கள் தங்கள் புதல்வர்களிடமும் ஆதித்த கரிகாலரைப் பற்றிச் .சொல்லிக் கொண்டிருந்தார்கள்.

அந்த விதமாக ஆதித்த கரிகாலரின் வீரப் புகழ் நாடெங்கும் அக் காலத்தில் பரவியிருந்தது. பன்னிரண்டாவது பிராயத்தில் போர்க்களம் புகுந்து கையில் கத்தி எடுத்துப் பகைவர் பலரை வெட்டி வீழ்த்தியவரும், சேவூர்ப் போர்க்களத்தில் பாண்டிய சைன்யத்தை முறியடித்து, வீர பாண்டியன் பாலைவனத்துக்கு ஓடிப் பாறைக் குகையில் ஒளிந்து கொள்ளும்படி செய்தவரும், பத்தொன்பதாவது பிராயத்தில் வீர பாண்டியனுடைய ஆபத்துதவிப் படையைச் சின்னாபின்னம் செய்து அவன் ஒளிந்திருந்த இடத்தைக் கண்டு பிடித்து அவன் தலையை வெட்டிக் கொண்டு வந்தவருமான இளவரசரைப் பார்ப்பதற்கு யார்தான் ஆர்வம் கொள்ளாமலிருக்க முடியும்?



த்தகைய வீர புருஷரைப் பற்றிச் சென்ற மூன்று நாலு வருஷ காலமாகப் பற்பல வதந்திகள் உலாவி வந்தன. ஆதித்த கரிகாலருக்கு யுவராஜ பட்டாபிஷேகம் ஆன பிறகு சுந்தர சோழ சக்கரவர்த்திக்கும் அவருக்கும் மனத்தாங்கல் வந்து விட்டது என்றும், ஆதித்த கரிகாலர் தமக்குப் பின் பட்டத்துக்கு வருவதைச் சக்கரவர்த்தி விரும்பவில்லையென்றும் சிலர் சொன்னார்கள். முன்னொரு காலத்தில் சோழ நாட்டு இளவரசன் ஒருவன் காஞ்சியில் தனி ராஜ்யம் ஸ்தாபித்துப் பல்லவர் பெருங்குலத்தைத் தொடங்கி வைத்தது போல் ஆதித்த கரிகாலரும் காஞ்சியில் தனி அரசை ஏற்படுத்த விரும்புகிறார் என்றார்கள் சிலர். அவருடைய தம்பியாகிய அருள்மொழிவர்மனிடம் சக்கரவர்த்தி அதிக அன்பு காட்டிப் பட்சபாதகமாக நடந்து கொள்வதால் ஆதித்த கரிகாலருக்குக் கோபம் என்றார்கள் வேறு சிலர். இன்னும் சிலர் இதை அடியோடு மறுத்து, கரிகாலனையும் அருள்மொழியையும் போல் நேய பாவமுள்ள சகோதரர்கள் இருக்க முடியாது என்று சாதித்தார்கள். இளவரசருக்கு இன்னும் திருமணம் ஆகாமலிருந்தது பற்றியும் பலர் பலவாறு பேசினார்கள். அரச குலத்து மங்கை யாரையும் கரிகாலர் மணப்பதற்கு மறுதளித்து ஆலய பட்டர் மகளை மணந்து அரியாசனம் ஏற்றுவிக்க எண்ணியதுதான் தந்தைக்கும் மகனுக்கும் வேற்றுமை நேர்ந்த காரணம் என்றும் சிலர் சொன்னார்கள். ஆதித்த கரிகாலருக்குச் சித்தப் பிரமை என்றும், பாண்டிய நாட்டு மந்திரவாதிகள் சூனிய வித்தையினால் அவரை அரைப் பைத்தியமாக்கி விட்டார்கள் என்றும், அதனாலேயே சக்கரவர்த்திக்குப் பிறகு அவர் சோழ சிங்காதனம் ஏறுவதைச் சிற்றரசர்கள் விரும்பவில்லையென்றும் சிலர் பேசிக் கொண்டார்கள்.

எது எப்படியிருந்தாலும், அந்த மகா வீரரைப் பார்ப்பதற்கு ஜனங்கள் அளவில்லாத ஆர்வங் கொண்டிருந்தார்கள். கடம்பூர் மாளிகைக்கு இளவரசர் கரிகாலர் விஜயம் செய்யப் போகிறார் என்ற செய்தி பரவியதிலிருந்தே சுற்றுப் பக்கங்களில் பெருங் கிளர்ச்சி உண்டாகியிருந்தது. அன்று மாலை வரப் போகிறார் என்று தெரிந்த பிறகு அக்கம் பக்கத்தில் இரண்டு காத தூரம் வரையில் இருந்த எல்லா ஊர்களிலிருந்தும் மக்கள் வந்து திரண்டு விட்டார்கள்.

அந்தக் கூட்டத்தை ஜன சமுத்திரம் என்று சொல்வது மிகப் பொருத்தமாயிருந்தது. ஆயிரமாயிரம் ஜனங்களின் கண்டங்களிலிருந்து எழுந்த பேச்சுக் குரல்கள் உருத் தெரியாத

ஒரே இரைச்சலாகிச் சமுத்திர கோஷத்தைப் போலவே கேட்டுக் கொண்டிருந்தது. மாளிகையின் முன் வாசலுக்கு எதிரே இளவரசரும் அவருடைய பரிவாரங்களும் வரு வதற்கு அரண்மனைக் காவலர்கள் வழி வகுத்து நின்றார்கள். பின்னா லிருந்த ஜனங்கள் வந்து மோதியபடி யால் முன்னாலிருந்தவர்கள் நகர்ந்து வந்து அவ் வழியை அடைக்கப் பார்த் ததும், காவலர்களால் தள்ளப்பட்டு அவர்கள் மீண்டும் பின்னால் சென்ற துமான காட்சி, சமுத்திரக் கரையில் அலைகள் வந்து மோதி விட்டுப் பின் வாங்குவதையொத்திருந்தது.

மரத்தின் மேல் இருந்த ஒருவன் திடீரென்று "அதோ வருகிறார்கள்!" என்று கூவினான். "எங்கே? எங்கே?" என்று ஆயிரம் குரல்கள் எழுந்தன. ஒரு குதிரை அதிவேகமாக வந்தது. கூட்டத்தைச் சிறிதும் பொருட்படுத்தாமல் புகுந்து பாய்ந்து வந்தது. குதிரையின் காலடியில் சிக் கிக் கொள்ளாமலிருக்கும்படி ஜனங் கள் இருபுறமும் நெருக்கியடித்துக் கொண்டு நகர்ந்து கொண்டு வழி விட்டார்கள். "இளஞ் சம்புவரை யன்!" என்று கத்தினார்கள். ஆம்; வந்தவன் கந்தமாறன்தான்! கூட்டத் திலிருந்தவர்கள் கேட்ட கேள்விகளுக் குப் பதில் சொல்லாமல் கந்தமாறன் வேகமாகக் குதிரையைச் செலுத்திக் கொண்டு போய்க் கோட்டை வாசல் அருகில் நிறுத்தி விட்டுக் கீழே குதித் தான். அங்கே நின்று கொண்டிருந்த சம்புவரையரையும் பழுவேட்டரைய ரையும் பார்த்து வணங்கி விட்டு, "இளவரசர் வருகிறார். ஆனால் சித் தம் அவ்வளவு சுவாதீனத்தில் இல்லை. திடீர், திடீர் என்று கோபம் வருகி றது. முன்னெச்சரிக்கை செய்வதற் காகவே வந்தேன். நல்லபடியாக இராஜோபசாரம் செய்து வரவேற்க வேண்டும். அவர் ஏதாவது தாறுமா றாகப் பேசினாலும் பதில் சொல்லா மலிருப்பது நல்லது!" என்றான். இவ்விதம் கூறிவிட்டு அங்கே நிற்கா மல் மேலே அண்ணாந்து பார்த்தான். முன் வாசல் கோபுரத்தின் மேன் மாடியில் அரண்மனைப் பெண்கள் காத்திருப்பது தெரிந்தது. உடனே கோட்டை வாசலில் புகுந்து உள்ளே சென்று, அங்கே ஒரு பக்கம் இருந்த மச்சுப் படிகளின் வழியாக மேலே ஏறிச் சென்றான்.

பெண்கள் இருக்குமிடத்தை அடைந்ததும் கந்தமாறனுடைய கண் கள் மற்றவர்களைப் பொருட்படுத்தா மல் நந்தினி தேவி இருக்குமிடத்தைத் தேடிக் கண்டுபிடித்தன. அவள் அரு கில் சென்று, "தேவி! தங்கள் விருப் பத்தை நிறைவேற்றினேன். இளவர சரை அழைத்து வந்தேன். அதோ வந்து கொண்டிருக்கிறார். ஆனால் மதம் பிடித்த யானையைப் போல் இருக்கிறார். அவரை எப்படிச் சமா ளிக்கப் போகிறோமோ, தெரிய வில்லை!" என்றான்.

"ஐயா! அதைப் பற்றி என்ன கவலை? மதம் பிடித்த யானையை அடக்கி ஆள்வதற்குத் தங்கள் சகோ தரியின் இரு கண்களாகிற அங்குசங் கள் இருக்கின்றன!" என்றாள் நந்தினி.

மணிமேகலை "அக்கா! இது என்ன பேச்சு?" என்றாள்.

கந்தமாறன் "மணிமேகலை! பழு ஊர் ராணி கூறுவதில் தவறு ஒன்று மில்லையே! ஆதித்த கரிகாலரைப் போன்ற வீராதி வீரரைப் பதியாகப் பெறத் தவஞ்செய்ய வேண்டாமா?" என்றான்.

மணிமேகலை பதில் சொல்வதற் குள் நந்தினி குறுக்கிட்டு, "ஐயா! இளவரசருடன் இன்னும் யாரேனும் வருகிறார்களா?" என்று கேட்டாள்.

"ஆம்; ஆம்! பார்த்திபேந்திர பல்லவனும் வந்தியத்தேவனும் வரு கிறார்கள்..."

நந்தினி மணிமேகலையைக் குறிப் பாகப் பார்த்து விட்டு, "எந்த வந்தி யத்தேவன்? தங்களுடைய சிநேகிதன் என்று சொன்னீர்களே, அவனா?" என்றாள்.

"ஆம்; என்னைப் பின்னாலிருந்து குத்திக் கொல்லப் பார்த்த அந்தப் பரம சிநேகிதன்தான். அவன் எங் கிருந்தோ எப்படியோ வந்து குதித்து வெள்ளாற்றங்கரையில் எங்களோடு சேர்ந்து கொண்டான். இளவசரு டைய தாட்சண்யத்துக்காகப் பார்த் தேன்; இல்லாவிடில் அங்கேயே

அவனை என் கத்திக்கு இரையாக்கி யிருப்பேன்!'' என்றான்.

மணிமேகலையின் முகம் சுருங்கிப் புருவங்கள் நெரிந்தன. ''அண்ணா! அவர் உங்கள் முதுகில் குத்தியது உண்மையாக இருக்கும் பட்சத்தில் அவரை எதற்காக இந்த மாளிகைக்குள் வர விட வேண்டும்?'' என்றாள்.

''கண்ணே! நீ பேசாமலிரு! அதெல்லாம் புருஷர்களின் விஷயம். நேற்றைக்குச் சண்டை போட்டுக் கொள்வார்கள்; இன்றைக்குக் கட்டிப் புரளுவார்கள்!'' என்றாள் நந்தினி.

கந்தமாறன் புன்னகை புரிந்து ''அப்படியெல்லாம் ஒன்றுமில்லை. இளவரசரின் முகத்துக்காகப் பார்க்க வேண்டியதாயிற்று. ஓகோ! கூடை கூடையாகப் புஷ்பம் கொண்டு வந்து வைத்திருக்கிறீர்களே! நீங்கள் இங்கிருந்து பொழிகிற மலர் மழையினால் இளவரசரின் கோபம் தணிந்து அவர் சாந்தம் அடைந்து விடுவார்! அதோ வந்து விட்டார்கள்! நான் கீழே போகிறேன்!'' என்று சொல்லிவிட்டு விடுவிடுவென்று மச்சுப் படிகளில் இறங்கிப் போனான்.

அந்த முன் வாசல் மேல் மாடத்திலிருந்து பார்க்கும் போது கண்ணுக்கெட்டிய தூரம் பரந்திருந்த ஜன சமுத்திரத்தின் நடுவே, சுழிக் காற்றினால் ஏற்படும் நீர்ச் சுழலைப் போல் ஓரிடத்தில் தோன்றிக் கொண்டிருந்தது. அந்தச் சுழலின் மத்தியில் அகப்பட்டுக் கொண்ட நாவாயைப் போல் மூன்று குதிரைகளும் அவற்றின் மேல் வந்த வீரர்களும் சில சமயம் தோன்றினார்கள்.





மறுகணம் ஜன சமுத்திரத்தின் பேரலைகளினால் அவர்கள் மறைக்கப்பட்டார்கள்.

அவ்விதம் ஏற்பட்ட சுழல் மேலும் மேலும் பிரயாணம் செய்து கோட்டையின் முன் வாசலை நெருங்கிக் கொண்டிருந்தது. கடைசியில், கோட்டை வாசலுக்கே வந்து விட்டது.

கோட்டை வாசலை அடைந்த மூன்று குதிரைகள் மீதும் வீற்றிருந்தவர்கள் ஆதித்த கரிகாலரும் பார்த்திபேந்திரனும் வந்தியத்தேவனுந்தான்.

அவர்களைத் தொடர்ந்து வந்த யானை குதிரை பரிவாரங்கள் எல்லாம் வெகு தூரம் பின்னாலேயே அந்தப் பெரிய ஜன சமுத்திரத்தினால் தடை செய்யப்பட்டு நின்றுவிட்டன.

குதிரைகள் வந்து மாளிகை வாசலில் நின்றதும், ஒரு பெரிய முழக்கம் எழுந்தது. இருபது பேரிகைகள், இருநூறு கொம்புகள், முந்நூறு தாரைகள், ஐந்நூறு தம்பட்டங்களிலிருந்து எழுந்த அந்தப் பெரு முழக்கத்தைக் கேட்டு அந்த மாபெரும் ஜன சமுத்திரத்தின் பேரிரைச்சலும் ஒருவாறு அடங்கியது.

வாத்தியங்களின் பெரு முழக்கம் சிறிது நேரம் ஒலித்து விட்டுச் சட்டென்று அடங்கி நின்றது.

அப்போது ஏற்பட்ட நிச்சப்தத்தில் கட்டியங் கூறுவோன் மேன் மாடத்தை அடுத்திருந்த ஒரு மேடை மீது நின்று இடி முழக்கக் குரலில் கூவினான்:—

"சூரிய வம்சத்திலே பிறந்த மனு மாந்தாதா, அந்த வம்சத்திலே புறாவுக்காக உடலை அறுத்துக் கொடுத்த சிபிச் சக்கரவர்த்தி, சிபிச் சக்கரவர்த்

திக்குப் பின் தோன்றிய இராஜ கேசரி, அவருடைய புதல்வர் பரகேசரி, பசுவுக்கு நியாயம் வழங்குவதற்காகப் புதல்வனைப் பலி கொடுத்த மனுநீதிச் சோழன், இமய மலையில் புலி இலச்சினை பொறித்த கரிகால் பெருவளத்தான், நலங்கிள்ளி, நெடுங்கிள்ளி, பெருநற்கிள்ளி, குள முற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன், குராப்பள்ளி துஞ்சிய கிள்ளிவளவன், எழுபத்திரண்டு சிவாலயம் எடுப்பித்த கோப்பெருஞ்சோழர், இவர்கள் வழிவழித் தோன்றிய தொண்ணூறும் ஆறும் புண் சுமந்த பழையாறை விஜயாலயச் சோழர், அவருடைய குமாரர் ஸஹ்யமலையிலிருந்து புகார் நகரம் வரையில் காவேரி நதி தீரத்தில் எண்பத்திரண்டு சிவாலயம் எடுப்பித்த ஆதித்த சோழர், அவருடைய குமாரர் மதுரையும் ஈழமும் கொண்டு தில்லைச் சிதம்பரத்தில் பொன் மண்டபம் கட்டிய பராந்தக சோழ சக்கரவர்த்தி, அவருடைய குமாரர் இரட்டை மண்டலத்துக் கன்னர தேவன் படைகளை முறியடித்து ஆற்றூர்த் துஞ்சிய வீராதி வீரராகிய அரிஞ்சய தேவர், அவருடைய குமாரர் ஈழம் முதல் சீட்புலி நாடு வரை ஒரு குடை நிழலில் ஆளும் பழையாறைப் பராந்தக சுந்தர சோழ சக்கரவர்த்தி, அவருடைய மூத்த குமாரர் — கோப் பெருமகனார் — வடதிசை மாதண்ட நாயகர் — யுவராஜ சக்கரவர்த்தி — வீரபாண்டியன் தலைகொண்ட ஆதித்த கரிகால சோழர் விஜயம் செய்திருக்கிறார்! பராக்! பராக்! பராக்!'' என்று அக் கட்டியங் கூறுவோன் கூறி முடித்ததும் மழை பெய்து இடி இடித்து ஓய்ந்தது போலிருந்தது.

உடனே அவன் அருகிலிருந்த இன்னொரு கட்டியக்காரன் ''கொல்லி மலை மன்னன் — ஒரே அம்பில் சிங்கத்தையும் கரடியையும் மானையும் பன்றியையும் சேர்த்துத் தொளைத்த வீரன் வல் வில் ஓரி — அவனுடைய பரம்பரையில் வழி வழித் தோன்றிய ராஜாதிராஜ ராஜ மார்த்தாண்ட வீர கம்பீர சம்புவரையன் — சோழ சக்கரவர்த்தி குலத்திற்கு என்றும் துணைவன்— வீரநாராயண ஏரியின் காவலன் — ஐயாயிரம் வீரப் படையின் தண்ட நாயகன் — தனது சிறு அரண்மனையில் எழுந்தருளியிருக்குமாறு கோப் பெருமகனார் ஆதித்த கரிகால சோழரை மன மொழி மெய்களால் உவந்து வரவேற்கிறான்! சோழ குலத் தோன்றலின் வரவு நல்வரவு ஆகுக!'' என்று கூவினான்.

அவன் அவ்விதம் பேரிடி போன்ற குரலில் கூறி முடித்ததும் மேல் மாடியிலிருந்து மலர் மாரி பொழிந்தது. ஆதித்த கரிகாலனும் வந்தியத்தேவனும் அண்ணாந்து பார்த்தார்கள். அங்கே இருந்த பல பெண்களின் சுந்தர முகங்களுக்கு நடுவில் வந்தியத்தேவனுக்கு மணிமேகலையின் மலர்ந்த புன்னகையுடன் கூடிய முகம் மட்டும் தெரிந்தது. வந்தியத்தேவனும் ஒரு கணம் புன்முறுவல் செய்தான். உடனே தன் காரியம் எவ்வளவு தவறானது என்பதை உணர்ந்தவன் போல் வேறு திசையை நோக்கினான்.

அதே சமயத்தில் மேலே நோக்கிய ஆதித்த கரிகாலனின் முகத்தில் முன்னை விடக் கடுகடுப்பு அதிகமாயிற்று. அவன் குதிரை மீதிருந்து கீழே குதித்தான்.

மற்ற இருவரும் குதிரை மீதிருந்து இறங்கினார்கள்.

இதற்குள் மறுபடியும் வாத்தியங்களின் கோஷம் முழங்கத் தொடங்கி விட்டது. சற்று அடங்கியிருந்த ஜன சமுத்திரத்தின் ஆரவாரப் பேரொலியும் மீண்டும் பொங்கி எழுந்து விட்டது.

விருந்தாளிகளும் அவர்களை வரவேற்பதற்கு வாசலில் நின்றவர்களும் கோட்டை வாசலுக்குள் புகுந்தார்கள். உடனே கோட்டை வாசலின் கதவுகள் படார், படார் என்று சாத்தப்பட்டன.

ஆதித்த கரிகாலன் திரும்பிப் பார்த்து விட்டு, ''ஏன் இவ்வளவு அவசரமாகக் கதவைச் சாத்துகிறார்கள்? தஞ்சைக் கோட்டையில் என் தந்தையைச் சிறை வைத்திருப்பது போல் என்னையும் இங்கே சிறை வைக்கப் போகிறீர்களா, என்ன? என்னுடன் வந்த பரிவாரங்கள் என்ன ஆவது?'' என்று கேட்டான்.

இரு கிழவர்களும் சில கண நேரம் திகைத்துப் போய் நின்றார்கள்.

பழுவேட்டரையர் முதலில் சமாளித்துக் கொண்டு; ''கோமகனே இந்தச் சோழ சாம்ராஜ்யத்திலுள்ள லட்சோப லட்சம் ஜனங்களின் அன்பு நிறைந்த உள்ளங்களே தங்களையும் தங்கள் தந்தையையும் சிறைப் படுத்தியிருக்கின்றன. தனியாகச் சிறை வைப்பது எதற்கு?'' என்றார்.

''இளவரசே! தங்களுடைய தரிசனத்துக்காக வந்திருக்கும் பெருந்திரளான மக்கள் இந்தச் சிறிய குடிசைக்குள் புகுந்தால் என்ன ஆவது? அவர்கள் வெளியில் நிற்கும் போது அக்கம் பக்கமுள்ள தோப்புகள் எல்லாம் குரங்குகள் அழித்த மதுவனம் போல் ஆகி விட்டன. ஜனக் கூட்டம் கலைந்ததும் தங்களுடன் வந்த பரிவாரங்களை உள்ளே அழைத்து வருகிறோம். அது வரையில் தங்களுக்கு வேண்டிய பணிவிடைகளைச் செய்ய இங்கே பணியாளர்கள் பலர் இருக்கிறார்கள்...'' என்றார் சம்புவரையர்.

இச்சமயம் கோட்டை வெளி வாசலில் ஜனங்களின் ஆரவாரம் அதிகமானது போலக் கேட்டது.

கரிகாலன் கந்தமாறனிடம், ''முன் வாசல் மேல் மாடிக்குப் போக வழி எங்கே?'' என்று கேட்டான்.

கந்தமாறன் மச்சுப் படிகள் இருந்த இடத்தைச் சுட்டிக் காட்டியதும் கரிகாலன் அந்தப் பக்கம் நோக்கி விடுவிடுவென்று நடந்து சென்றான். கந்தமாறனும், வந்தியத்தேவனும், பார்த்திபேந்திரனும் உடன் சென்றார்கள்.

சம்புவரையர், பழுவேட்டரையரைப் பார்த்து, ''இது என்ன? வழியோடு போகிற சனியனை விலைக்கு வாங்கியது போல் வாங்கிக் கொண்டோமே? இவனுடைய மூளை சரியாயிருப்பதாகவே தோன்றவில்லையே? சின்னப் பிள்ளைகளின் பேச்சைக் கேட்டு இந்தக் காரியத்தில் தலையிட்டோம்!'' என்றார்.

''அப்படி என்ன மோசம் வந்து விடப் போகிறது? காரியம் நடந்தால் நடக்கட்டும்; நடக்கா விட்டால் போகட்டும்'' என்றார் பழுவேட்டரையர்.



## அருள்வாக்கு

**ப**ல நூறாயிரம் கெட்ட வ்ருத்திகளை ஒவ்வொன்றாக அடக்கப் பார்த்து ப்ரயோஜனமில்லை. அது முடியாத காரியம். ஆகையால் அவை கிளைகள் என்றால் அவற்றுக்கு வேராக உள்ள ஆசை என்ற ஒன்றை வெட்டி விட்டால் போதும். ஆனால் வெளியே நீண்டிருக்கும் கிளையை வெட்டுவதைவிட உள்ளே புதைந்துள்ள வேரைத் தோண்டி அழிப்பது ரொம்பவும் கஷ்டம்தான். இருந்தாலும் இதைச் செய்யாவிட்டால் வெட்டிய கிளைகள் மறுபடி மறுபடி முளைத்துக் கொண்டுதானிருக்குமென்பதால் எப்படியாவது இதை ஸாதிக்கத்தான் வேண்டும்.

கறையான் புற்று வைக்கிறது. அதை உடைக்கிறோம். அடுத்த வாரம் பார்த்தால் அது மறுபடி முளைத்திருக்கிறது. மறுபடி தட்டி விடுகிறோம். அதற்கப்புறம் சில நாட்கள் போனால் புற்று மறுபடியும் கிளம்பித்தானிருக்கிறது. இதற்கு முடிவு எப்படி? தாய்ப் பூச்சி இருக்கிற வரைக்கும் அது கொஞ்சங்கூட அலுக்காமல் சலிக்காமல் இப்படிப் புற்று வைத்துக் கொண்டேதான் இருக்கும். அது எங்கே எந்த சந்து பொந்தில் மூங்கிலுக்குள் ஒளிந்து கொண்டிருக்கிறதோ அங்கே தேடித் தோண்டி அதை எடுத்து ''ஸம்ஹாரம்'' பண்ணினால்தான் அப்புறம் புற்று புறப்படாமலிருக்கும். இப்படியேஸகல கஷ்டத்துக்கும் ஸகல துர்வ்ருத்திகளுக்கும் தாய்ப்பூச்சியாயுள்ள ஆசையை அழிக்காமல், அந்தக் கஷ்டம் ஒவ்வொன்றையும் நிவ்ருத்தி செய்து கொள்ளவும், ஒவ்வொரு துர்வ்ருத்தியாகப் போக்கிக் கொள்ளவும் பாடுபட்டால் அவ்வளவும் நிஷ்பலனாகத்தான் ஆகும். Cause-ஐ (காரணத்தை) அழிக்காமல் விடும்வரை effect-ஐ (விளைவுகளை) நிரந்தரமாக அழிப்பது என்பது நடக்காத கார்யம்.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.

''காரியத்தைப் பற்றியே நான் சொல்லவில்லை. நம் வீட்டில் இருக்கும் போது ஏதாவது ஏடாகூடமாக நடக்கக் கூடாது அல்லவா? நிமித்தம் ஒன்றும் சரியாக இல்லை. அவனோ மதம் பிடித்த யானையைப் போல் இருக்கிறான். முகத்தின் கடுகடுப்பையும் நாக்கில் விஷத்தையும் பார்த்தீர்கள் அல்லவா?''

''சில நாள் பல்லைக் கடித்துக் கொண்டு பொறுமையாயிருக்க வேண்டியதுதான். அந்தப் பல்லவன் பார்த்திபேந்திரன் அவனைக் கட்டுக்குள் வைத்திருக்க உதவியாயிருப்பான். இன்னொரு துஷ்டச் சிறுவன் பின்னோடு வந்திருக்கிறானே, அவனைத்தான் எனக்குப் பிடிக்கவில்லை. அவன் ஒற்றன் என்று கூட எனக்குச் சந்தேகம். முன்னால் நாம் கூட்டம் போட்ட அன்றைக்குக் கூட அவன் இங்கு வந்திருந்தான் அல்லவா? நேற்று மாலை இந்தக் கோட்டைக்கு வெளியில் மரத்தின் மறைவில் நின்றிருந்தவனும் அவன்தான்!''

''அவன் என் மகனுடைய சிநேகிதன் அல்லவா? ஆகையால் அவனைப் பற்றிப் பயமில்லை. இப்போது எதற்காகப் பெண்கள் இருக்கும் இடத்துக்கு அவசரமாகப் போகிறார்கள்? நாமும் போவோமா?''

இச் சமயம், மச்சுப்படி வரையில் போன பார்த்திபேந்திரன் திரும்பி வந்து, இரு பெரும் குறுநில மன்னர் பேசிக் கொண்டிருந்த இடத்தை அணுகினான். சம்புவரையர் கடைசியாகக் கூறிய வார்த்தைகள் அவன் காதில் விழுந்தன.

''ஐயா! இளவரசர் விஷயத்தில் உங்களுக்கு வேறு என்ன சந்தேகம் இருந்தாலும், பெண்கள் சம்பந்தமான சந்தேகம் மட்டும் வேண்டியதில்லை. பெண்களை அவர் கண்ணெடுத்தும் பார்ப்பதில்லை....'' என்று சொன்னான்.

பழுவேட்டரையர் புன்னகையுடன், ''அப்படியானால் அவரை நாம் இங்கே அழைத்ததின் நோக்கம் எப்படி நிறைவேறும்?'' என்று கேட்டார்.

''அது சம்புவரையர் திருமகளின் அதிர்ஷ்டத்தையும் சோழ சாம்ராஜ்யத்தின் அதிர்ஷ்டத்தையும் பொறுத்தது.''

''பார்த்திபேந்திரா! மணிமேகலையின் அதிர்ஷ்டம் ஒரு புறம் இருக்கட்டும்! வரும் போதே எதற்காக இளவரசர் இவ்வளவு கடுகடுத்த முகத்துடன் வருகிறார்? எதற்காக இப்படி விஷமமாகப் பேசுகிறார்? அவரை நீ எப்படியாவது இங்கிருந்து சமாதானமாக அழைத்துப் போனால் போதும் என்று தோன்றுகிறது!'' என்றார் சம்புவரையர்.

''வெள்ளாற்றங் கரை வரையில் இளவரசர் சுமுகமாகவும் குதூகலமாகவும் வந்தார். பின்னர் இந்த வந்தியத்தேவனும் வைஷ்ணவன் ஒருவனும் வந்து சேர்ந்தார்கள். அவர்கள் ஏதோ சொல்லியிருக்க வேண்டும். அது முதல் இளவரசரின் குணம் மாறியிருக்கிறது....''

''நாங்களும் அப்படித்தான் நினைத்தோம். இப்போது என்ன செய்யலாம்? அந்தத் துஷ்டப் பையனும் உங்களோடு வந்திருக்கிறானே?''

''நீங்கள் கொஞ்சம் பொறுமையாயிருங்கள். நான் எல்லாம் சரிப்படுத்தி விடுகிறேன். அந்தப் பையனுடன் எனக்கும் ஒரு சண்டை இருக்கிறது. அதை நான் சமயம் பார்த்துத் தீர்த்துக் கொள்கிறேன்'' என்றான் பார்த்திபேந்திரன்.

கரிகாலனும் மற்ற இருவரும் முன் வாசல் மேன்மாடத்துக்குச் சென்ற போது அங்கிருந்த பெண்கள் திரும்பிப் படியில் இறங்கி வரும் சமயமாயிருந்தது.

கரிகாலன் கந்தமாறனைப் பார்த்து, ''நண்பனே! தாய்மார்களையெல்லாம் நமக்காக இங்கு வந்து காத்திருக்கும்படி செய்யலாமா? அது பெருந்தவறு. நாம் அல்லவா இவர்கள் இருக்குமிடம் சென்று நமது வணக்கத்தைச் செலுத்த வேண்டும்?'' என்று கூறிவிட்டுப் பெண்மணிகளுக்கு வணங்கி வழி விட்டு நின்றான். ஒவ்வொருவராக இறங்கிய போது கந்தமாறனிடம் யார் யார்



என்று கேட்டுத் தெரிந்து கொண்டான். நந்தினியைப் பார்த்ததும் ''ஓ! பழுவூர் இளைய பாட்டி அல்லவா? உண்மையாகவே வந்திருக்கிறார்களா? மிகவும் சந்தோஷம்!'' என்றான். நந்தினி ஒன்றும் சொல்லாமல் அவனைத் தன் கூரிய கண்களால் பார்த்து விட்டுச் சென்றாள். அப்பார்வையின் தீட்சண்யத்தினால் கரிகாலனுடைய உடம்பு சிறிது நடுங்கிற்று. மறுகணமே அவன் சமாளித்துக் கொண்டு, பின்னால் வந்த மணிமேகலையைப் பார்த்து, ''ஓகோ! இவள் உன் தங்கை மணிமேகலையாக இருக்க வேண்டும். சித்திரத்தில் எழுதிய கந்தர்வ கன்னிகையைப் போல் இருக்கிறாள். இவளுக்கு விரைவில் ஒரு நல்ல மாப்பிள்ளையைப் பார்த்துக் கலியாணம் பண்ணி வைக்க வேண்டும்!'' என்றான். மணிமேகலை வெட்கத்தினால் குழிந்த கன்னங்களுடன் வந்தியத்தேவனைக் கடைக் கண்ணால் பார்த்து விட்டு மடமடவென்று கீழே இறங்கினாள்.

பெண்கள் எல்லாரும் சென்ற பிறகு கரிகாலன் அந்த மேல் மாடத்தின் முகப்புக்குச் சென்று நின்றான். வாசலில் அப்போதுதான் கலையத் தொடங்கியிருந்த ஜனக் கூட்டத்தினிடையே மறுபடியும் பேராரவாரம் எழுந்தது. ஜனங்கள் திரும்பிக் கோட்டை வாசலண்டை வரத் தொடங்கினார்கள்.

அந்த மேல் மாடத்தையொட்டித் தனியாக நீண்டு அமைந்திருந்த மேடையில் கட்டியங்கூறுவோன் நிற்பதைக் கரிகாலன் கவனித்தான். அவனைச் சமிக்ஞையினால் அருகே வரும்படி அழைத்தான். வந்தவுடன் ஜனங்களுக்குச் சில விஷயங்களை அறிவிக்கும்படி கூறினான். கட்டியங்கூறுவோன் திரும்பிச் சென்று பேரிகையைச் சில தடவை முழக்கினான். பின்னர், ஜனங்களைச் சமிக்ஞையினால் பேசாதிருக்கும்படி கேட்டுக் கொண்டான். ஆதித்த கரிகாலரின் விருதுகளில் சிலவற்றை விடுத்துச் சிலவற்றை மீண்டும் கூறிவிட்டு ''அத்தகைய சோழர் குலக் கோமகனார் இந்தக் கடம்பூர் மாளிகையில் ஒரு வாரம் — பத்து நாட்கள் வரை தங்கியிருப்பார். சுற்றுப்புறமுள்ள ஊர்களுக்கெல்லாம் விஜயம் செய்வார். அப்போது அந்தந்த ஊர் மக்களை நேரில் கண்டு அவரவர் குறைகளையெல்லாம் கேட்டு அறிந்து கொள்வார்!'' என்று கூவினான்.

அவ்வளவுதான்; இதுவரையில் அந்த ஜனக் கூட்டத்தில் எழுந்த ஆரவாரமெல்லாம் நிச்சப்தம் என்று சொல்லும்படியாக அவ்வளவு பெரிய பேரிரைச்சல் கிளம்பியது. குதூகலக் குரல்களும் வாழ்த்தொலிகளும் கரகோஷ ஓசையும் சேர்ந்து கலந்து எழுந்து சுற்றுப் பக்கம் வெகு தூரம் சென்று வீரநாராயண ஏரியிலிருந்து எழுபத்து நாலு கணவாய்களின் வழியாகப் பாய்ந்த தண்ணீர் வெள்ளத்தின் ஓசையையும் அமுங்கி விடும்படி செய்தன.

சம்புவரையரும் பழுவேட்டரையரும் பார்த்திபேந்திரனும் அவர்கள் முன்னால் நின்ற இடத்திலேயே நின்று கொண்டிருந்தார்கள். ஆதித்த கரிகாலன் அவர்கள் நின்ற இடத்தை நெருங்கியதும், ''பார்த்திபேந்திரா! ஏது நீ இங்கேயே நின்று விட்டாய்? இந்தக் கிழவர்களுடன் சேர்ந்து நீயும் சதியாலோசனை செய்யத் தொடங்கி விட்டாயா?'' என்று கேட்டான்.

கிழவர்கள் இருவரும் திடுக்கிட்டுக் கரிகாலனுடைய முகத்தைப் பார்த்






தார்கள். அவன் முகத்தில் புன்னகை தவழ்ந்து கொண்டிருந்தது.

சம்புவரையர் சிறிது சமாளித்துக் கொண்டு, "கோமகனே! சற்று முன் சிறை என்றீர்கள். இப்போது சதி என்கிறீர்கள். இந்தக் குடிசையில் தாங்கள் விருந்தாளியாகத் தங்கியிருக்கும் போது தங்களுக்கு அணுவளவேனும் தீங்கு நேராது என்று ஆணையிட்டுக் கூறுகிறேன். அவ்விதம் நேர்வதற்கு முன்னால் என் உடலிலிருந்து உயிர் பிரிந்து போயிருக்கும்!" என்றார்.

"ஐயா! எனக்குத் தீங்கு நேரும் என்று நான் அஞ்சுவதாக எண்ணினீர்களா? ஒரு லட்சம் பாண்டிய நாட்டுப் பகைவர்களின் மத்தியில் இருக்கும்போதே எனக்குத் தீங்கு நேரும் என்று நான் அஞ்சியதில்லை. என் அருமைச் சிநேகிதர்களின் மத்தியில் இருக்கும் போது அஞ்சுவானேன்? ஆனால் தங்களுடைய இந்த மாளிகையைக் குடிசை என்று மட்டும் கூற வேண்டாம்! ஆகா! இதைச் சுற்றியுள்ள மதில் சுவர்கள் எவ்வளவு உயரம்? எவ்வளவு கனம்? தஞ்சாவூர்க் கோட்டை மதிலை விடப் பெரியதாகவல்லவா இருக்கிறது? எந்தப் பகைவர்களை முன்னிட்டு இவ்வளவு பந்தோபஸ்தாகக் கோட்டை கட்டியிருக்கிறீர்கள்?" என்றான் கரிகாலன்.

"இளவரசே! எங்களுக்கென்று தனிப் பகைவர்கள் யாரும் இல்லை. சோழ குலத்தின் பகைவர்கள் எங்கள் பகைவர்கள்; சோழ குலத்தின் நண்பர்கள் எங்களுக்கும் நண்பர்கள்."

"தங்கள் வாக்குறுதி எனக்கு மிக்க மகிழ்ச்சி அளிக்கிறது. இதைத் தங்கள் குமாரன் கந்தமாறனிடமும் சொல்லி வையுங்கள். என்னுடைய நண்பனாகிய வாணர் குலத்து இளவரசனைக் கந்தமாறன் தன்னுடைய பகைவன் என்று கருதி வருகிறான். இது பெரும் பிழையல்லவா?" என்று ஆதித்த கரிகாலன் கூறிய போது, கந்தமாறன் தலையைக் குனிந்து கொண்டான்.

(தொடரும்)

## பற்களைப் பற்றிய ஒரு பெரிய உண்மை

வாய் துர்நாற்றம் என்பது பற்களைவிட அதிகம்,
ஈறுகள் சம்பந்தப்பட்டதாகும்.





## மற்றுமொரு பெரிய உண்மை

போர்ஹென்ஸ்* டூத்பேஸ்ட்டில்
உள்ள ஒப்பற்ற அஸ்ட்ரிஞ்ஜென்ட் மட்டுமே ஈறுகளை
வலுவாக்கி அவற்றை ஆரோக்கியமாக வைக்கிறது.
அதனால் வாய் துர்நாற்றம் ஏற்பட வாய்ப்பே இல்லை.




*விலங்குகளின்
எலும்புகள்
அடிப்படையிலான
எந்த பொருளும்
இதில் இல்லை.



**போர்ஹென்ஸ்**
பராமரிப்பு
32 என்றும் பத்திரம்

ஒரு பல் டாக்டரால் உருவாக்கப்பட்ட டூத்பேஸ்ட்.

GM 68/88 Tm

# தசரதன் மலைக்குப் போகிறான்...

"இன்னும் கொஞ்சம் போட்டுக்கோ மாறன்" என்று குரலில் உபசாரத்தைக் குழைத்துப் பரிமாறப் போனாள் கோசலா.

"வேண்டாம், அத்தை, போதும்... போதும்" என்று மறுப்புச் சொன்னான் மாறன்.

"ஏண்டா அவல் கேசரி பிடிக்காதா உனக்கு?"

"ஓ... ரொம்பப் பிடிக்குமே!"

"அப்படின்னா இப்ப இது ருசியாய் இல்லையா?"

"பிரமாதமாய் இருக்கு அத்தை!"

"அப்புறம் என்ன, இன்னும் கொஞ்சம் போடறேன், சாப்பிடு..." என்ற கோசலா, பளபளக்கும் எவர்ஸில்வர் தூக்கில் இருந்த நெய்யும் முந்திரியும் மணக்கும் அவல் கேசரியை, அன்னக் கரண்டியால் தாராளமாய் அள்ளி மாறனின் இலையில் போட்டாள்.

"ஏற்கெனவே நிறையச் சாப்பிட்டாச்சு. அதான் வேணாம்னு சொன்னேன். கேசரி ரொம்ப ருசியாய் இருக்கு அத்தை" என்று சர்டிபிகேட் வழங்கியபடி ருசிக்கலானான்.

உமாகல்யாணி



மூக்கில் கிடந்த வைர பேஸரி டால்வீச, பட்டுப் புடைவை சரசரக்க அடுத்த இலைக்குப் பரிமாறப் போனாள் கோசலா.

இருமுடிக்கட்டு பூஜை முடிந்து அன்ன தானம் நடைபெறுவதை மிகவும் சந்தோஷத்துடன் பார்த்துக் கொண்டிருந்தான் தசரதன். அவனது மனைவி கோசலாதான் இனிப்பை வழங்கிக் கொண்டிருந்தாள்.

அவள் முகம் பெருமிதத்தில் வழிந்து கொண்டிருந்தது.

இந்த ஊரிலேயே இருமுடிக்கட்டு பூஜை அவன் வீட்டில்தானே கோலாகலமாகக் கொண்டாடப்படுகிறது. தவிரவும் தினப்படி பூஜையும் அமர்க்களமாக நடத்தப்படும்.

கார்த்திகை முதல் வாரத்தில் மாலை போடுவான் தசரதன். மார்கழி முடிய விரதம்தான். தினமும் ஐயப்ப ஆராதனைதான். இந்த இரண்டு மாதங்களும் தினமும் வீட்டில் திருவிழாக் கோலம்தான்.

தசரதனின் தங்கை ஜானகிதான் இந்த இரு மாதங்களும் அண்ணன் வீட்டில் கூடவே இருந்து அவன் மலைக்குப் போய் வரும் வரை உதவிகள் பண்ணுவாள்.

அவள் இங்கே இருப்பதால் அவளின் குழந்தைகள் மாறனும், மல்லிகாவும் இந்த இரண்டு மாதங்களும் இங்கேயே தங்குவார்கள்.

ஆனால் தங்கையின் கணவன் லெட்சுமணன் மட்டும் வரமாட்டான். குடித்துவிட்டு எங்காவது விழுந்து கிடப்பான். வாங்கும் சம்பளத்தில் பாதி சாராயக் கடைக்கும் மீதி ஆப்பக்கடைக்கும், சூரிப்பின்ளை ஹோட்டலுக்கும் போய்விடும். அவர்கள் வீட்டில் அடுப்பு எரிய வேண்டுமானால்



ஜானகி பிடி சுற்றியாக வேண்டும். அந்த வருமானத்தில் கூட கை வைக்க அடிக்கடி முயற்சிகள் பண்ணுவான் லெட்சுமணன். ஆனால் ஜானகி மனத்தை இறுக்கிக் கொண்டு விரட்டி விடுவாள்.

அவ்வப்போது தசரதன் நிறைய முயற்சிகள் செய்து, உதவிகள் செய்து லெட்சுமணனைக் கரையேற்ற முயற்சி செய்வான். ஆனாலும் அவன் திருந்தியபாடில்லை.

''தானும் கெட்டு, உதவுகிறவனையும் கெடுக்கிற கதை உங்க தங்கை புருஷனோட கதை. அதனாலே உதவி, கிதவி பண்றேன்னு அலையாமல் உங்க வேலையைப் பாருங்க'' என்பாள் கோசலா.

ஆரம்பத்தில் இப்படிச் சொல்லிக் கொண்டிருந்த கோசலா, அப்புறம் தடையுத்தரவே போட்டுவிட்டாள். அதன் பிறகும் பரீட்சை வைக்க அவன் தயாராய் இல்லை. எனவே ஒதுங்கிக் கொண்டான்.

**''போ**ய்ட்டு வர்றோம் அண்ணா. போய்ட்டு வர்றோம் அண்ணி. வாடா மாறன்; வா மல்லிகா...'' என்றபடி புறப்பட்டாள் ஜானகி.

இரண்டு மாதங்களாகப் பூஜைக்கு உதவியாயிற்று. இனிமேல் என்ன வேலை?

அனுப்பி வைத்தார்கள் அவர்களை.

''சுவாமியே ஐயப்பா, உன் பெயரைச் சொல்லித்தான் என் தங்கைக்கு உதவ முடிகிறது. சாதாரணமாய் என்றால் உதவ விடுவாளா கோசலா. சுவாமி காரியம் என்பதால் அவளும் பேசாமல் இருக்கிறாள். நானும் அன்னதானம், ஆடை தானம் என்கிற பெயரில் அவர்களை இங்கு வரவழைத்து அவர்களுக்கு இரண்டு மாதங்கள் உணவு போட்டு, உடையும் கொடுத்து அனுப்புகிறேன். அதுவே உருவ வழிபாட்டில் ஈடுபாடு இல்லாதிருந்த எனது மனமாற்றத்துக்கும் உதவியிருக்கிறது. தங்கைக்கு உதவ மாலைபோட ஆரம்பித்த நான், இப்போது மெய்யாலுமே ஐயப்ப பக்தனாகிவிட்டேன்'' என்று தனக்குள் கூறிக் கொண்ட தசரதன், சரணம் விளிக்கலானான்.








பாடசாலை வித்யார்த்திகளின் ஒரு பகுதி.

மஹான் ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதரவர்களால், 1542 — இல் ஸ்தாபிக்கப்பட்டு, தொடர்ந்து நடந்து வரும் வேத பாடசாலையை ஸமிதியானது தாய் போல் இயங்கிக் காப்பாற்றி வருகிறது. தற்போது பாடசாலையில் 90 மாணாக்கர்கள் வேதாத்யயனம் செய்து வருகின்றனர். அவர்களுக்கு ஒரு நாள் உணவளிக்க, உணவு வகையினை அனுசரித்து சுமார், முறையே ரூ. 250/- அல்லது 300/- அல்லது 500/- ஆகிறது. இந்தத் தர்மம் நிரந்தரமாய் நடக்க ரூ. 2500/- அல்லது 3000/- அல்லது 5000/- மூலதனம் ஏற்படுத்தியோ, அவ்வப்போது தொகை அனுப்பியோ, ஒரு குறிப்பிட்ட தினத்தில் உணவளிக்கும் கைங்கர்யத்தில் பங்கு கொள்ளக் கோருகிறோம். நன்கொடை அனுப்பவேண்டிய பெயரும் முகவரியும்:

**அத்வைத வித்யாசார்யா மஹாராஜா ஸாஹேப் ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதர் புண்ய ஸ்மரண ஸமிதி,**
**D — 76, மூன்றாவது கிராஸ் தெரு, ஸ்ரீநகர் காலனி,**
**கும்பகோணம் — 612 001.**

****இந்த நன்கொடைக்கு 80-G விதியின்படி வருமான வரிவிலக்கு உண்டு****

# வாக்கு வரந்தரும் தெய்வமே!

•

மக்களைப் பெத்த
மகராசா — உன்
கண்களைக் கொஞ்சம்
திறராசா!

•

காலில் செருப்புக்குத்
தோலாவோம் — குளிர்
காய்ந்திட வேணுமா
தியாவோம்!

•

காகிதம் தானய்யா
ஓட்டுனக்கு — அதில்
ஆயிரம் லாபங்கள்
எங்களுக்கு!

•

இதயந் துடிக்குதக்
காகிதத்தில் — அதை
இப்படிப் போடப்பா
சீக்கிரத்தில்!

•

கல்லறை போன
தலைவரின் பின் — வெறுஞ்
சில்லறை யாகவே
மிஞ்சிவிட்டோம்!

•

அவர்களின் ஆட்சியில்
நீசிரித்தாய்! அதை
மீண்டும் எழுப்புவோம்
ஆதரிப்பாய்!

•

பங்களா கார்களும்
வச்சிருக்கோம் — பணம்
கறுப்பில் வெளுப்பில்
உச்சரிச்சோம்!

•

ஏழை உனக்குப்
பணிபுரிய — இந்த
ஏழைக் கிவையுண்டு
வாஸ்தவம்தான்!

•

ஆலய தெய்வத்தை
யார் தொழுவார்? கையில்
ஓட்டுள்ள தெய்வமே
போற்றுகிறோம்!

•

கற்பூர தீபங்கள்
காட்டுகிறோம் — அந்த
வாக்கு வரம்தர
நீட்டு கரம்!

•

என்னென்ன சொன்னாலும்
ஒத்துக்கிறோம் — நீ
சொன்ன விலைக்கெம்மை
வித்துக்கிறோம்!

•

எங்களை உன்னிடம்
ஒப்படைத்தோம்! உன்னைக்
காப்பதாய் உண்மையைக்
கற்பழித்தோம்!

— தமிழன்பன்

# இன்று இறப்பு விழா

12

உடம்பின் முக்கியமான மூன்று இடங்களில் தோட்டாக்கள் பிரகப்பிரவேசம் செய்திருக்க, பூபேஷ் மிக மோசமாய்ச் சிதைந்திருந்தார். சதைகள் சிதறிய தினுசிலிருந்து, தோட்டாக்கள் ஸ்பைரல் வகையாக இருக்கலாம் என எண்ணத் தோன்றியது விவேக்கிற்கு.

எருக்குழியினின்றும் மேலே கொண்டு வரப்பட்டு, மல்லாத்தப்பட்ட பூபேஷின் அருகில் மண்டியிட்டு உட்கார்ந்தான் விவேக். கோட் பாக்கெட்டுகளிலும், பேண்ட் பாக்கெட்டுகளிலும் கையை நுழைத்து, ஒரு பர்ஸ், ஒரு கர்ச்சிப், ஒரு பாக்கெட் டயரி.... என்று வரிசையாய்ச் சேகரம் பண்ணக் கடைசியாய் நான்காய் மடிக்கப்பட்ட அந்தத் துண்டுக் காகிதம் கிடைத்தது.

பிரித்தான்.

ஆங்கிலத்தில் டைப் செய்யப்பட்ட இரண்டு வரிகள் கண்களுக்குள் அதிர்ச்சியாய்ப் புகுந்தது. 'இறப்பு விழா மேடையில் எங்களின் முதல் அரங்கேற்றம் இது. எங்களின் கோரிக்கைகளுக்கு இணங்காவிட்டால் அரங்கேற்றங்கள் தொடரும்' — இந்தியக் கழுகுகள்.

விவேக் அந்த துண்டுக் காகிதத்தை மடித்துப் பத்திரப்படுத்திக் கொண்டே பக்கத்தில் நின்றிருந்த கான்ஸ்டபிளைக் கூப்பிட்டான்.

"இந்த எருக்கிடங்குக்கு இன்சார்ஜ் யார்ன்னு விசாரிச்சுக் கூட்டிட்டு வாங்க."

தலையாட்டிய அந்த கான்ஸ்டபிள், எருக்குழிகளுக்கு மத்தியில் நடந்து போய்க் காக்கி அரைக் கைச் சட்டையும், காக்கி அரை டிராயரும் அணிந்த, ஒரு நடுத்தர வயது நபரைக் கூட்டிக் கொண்டு வந்தார். பூபேஷின் பிணத்தைப் பார்த்ததும் சில விநாடிகள் ஸ்தம்பித்து போய், பின் வியர்த்துக் கொண்டே விவேக்கை ஏறிட்டான். பதற்றமாய்க் கைகளை ஆட்டிக் கொண்டு சொன்னான்.

"ஹம்கோ... குச் நை... மாலும் சாப்..."

விவேக் கலோக்கியல் இந்திக்குத் தாவினான்.

"உம் பேரென்ன?"

"சலீம்... ஸார்"

"இந்த எருக்கிடங்குக்கு இன்சார்ஜ் நீதானே?"

"ஆமா... ஸார்."

"இந்தக் காரியத்தைப் பண்ணினது யாரு?" விவேக் பூபேஷைக் காட்டினான்.

"தெ... தெரியாது ஸார்."

"அதெப்படி... உனக்குத் தெரியாமே போகும்? ஒரு டெட்பாடியைக் கொண்டு வந்து, எருக்குழிக்குள் போட்டிருக்கிறார்கள். குறைந்தபட்சம் ரெண்டு பேராவது இந்த பாடியைக் கொண்டு வந்து போட்டிருக்கணும். காரோ... வேற ஏதாவது ஒரு வாகனமோ வந்திருக்கணும். இந்த எருக்கிடங்கு உன்னோட இன்சார்ஜுக்குள் இருக்கும் போது, நீ பார்க்காமே இருக்க முடியாதே?"

விவேக் பேசப் பேச, அந்த சலீம் இரண்டு கைகளையும் குவித்துச் சேவித்தான். "ஸார்! பகல் நேரத்திலேயே இந்த எருக்குழிப் பக்கம் ஜனங்கள் யாரும் வர மாட்டாங்க. குப்பை லாரிங்க மட்டும் வந்து, குப்பையைக் கொட்டிட்டுப் போயிரும். ஒவ்வொரு கார்ப்பரேஷன் லாரியும் எவ்வளவு லோடு குப்பையைக் கொண்டு வந்து போட்டதுங்கற குறிப்பை மட்டும் நோட்புக்குல எழுதி வெக்கிற வேலைதான் எனக்கு."

"ராத்திரியில் இந்த கிடங்கைப் பார்த்துக்கிறது யாரு...?"

"ராத்திரிக்கு இங்கே யாரும் வர மாட்டாங்க ஸார். சாயந்தரம் ஆறு மணியோடு குப்பை லாரி 'லோடு' கொண்டு வர்றதை நிறுத்திடும். நானும் ஆறு மணிக்கெல்லாம் வீட்டுக்குப் போய்ட்டு, மறுநாள் காலையில அஞ்சரை மணிக்கு ட்யூட்டிக்கு வந்துடுவேன். இந்தச் சம்பவம் நடந்திருந்தா ராத்திரி நேரத்துலதான் நடந்திருக்கணும் ஸார்...."

விவேக் அருகிலிருந்த இன்ஸ்பெக்டரிடம் திரும்பினான்.

"பூபேஷ் வீடு எங்கே இருக்கு...?"

"மௌலானா ஆஸாத் ரோட்ல ஸார்."

"வீட்ல யார் இருக்காங்க...?"

"அவரோட சன்னும் டாட்டரும்..."

"மிஸஸ்?"

"அவங்க எப்பவோ இறந்துட்டாங்க ஸார்."

"இப்ப... நாம பூபேஷ் வீட்டுக்குப் போறோம்..."

"எஸ்... ஸார்..."

**சை**படுல்லா எல்லைக்குள் ஜீப் நுழைந்து, மௌலானா ஆஸாத் ரோட்டைத் தொட்டு, போகன் வில்லாக் கொடிகளில், ரோஸ் மில்க் நிறப் பூக்கள் கொள்ளை கொள்ளையாய்ப் பூத்துக் கிடந்த பூபேஷ் வீட்டு முன்னால் நின்றது. என்ஜின் ஊமையானதும், விவேக்கும் இன்ஸ்பெக்டரும் கீழே குதித்தார்கள். காம்பௌண்ட் கேட்

ராஜேஷ்குமார்

டைத் தள்ளிய போது, பொமரேனியன் நாயொன்று போர்டிகோ தூணுக்குப் பின்னாலிருந்து, விருட்டென்று எட்டிப் பார்த்துக் குரைத்தது. பின், படிகளில் வேகமாய் இறங்கி ஓடி வந்தது. அதைத் தொடர்ந்து ''கோன் சீமா...? டாடி ஆரே..?'' – என்று குரல் கொடுத்தபடி வீட்டின் முன்பக்க அறையிலிருந்து, ஸல்வார் கம்மீஸ் அணிந்த அந்தப் பெண் வெளிப்பட்டாள். முகத்திற்கும் கை கால் களுக்கும் எண்ணெய் மாதிரி எதையோ பூசித் தேய்த்திருந்தாள். வலது பக்கக் கன்னத்தில், பருக்கள் சின்னதாய் ஒரு கூட்டம் போட்டிருந்தது. இன்ஸ்பெக்டரை யும் விவேக்கையும் பார்த்ததும் மெலிதாய்த் திடுக்கிட்டாள். அவர்களை வேகமாய் நெருங்கியபடி கேட்டாள்.

''எஸ்...''

''இவ்வளவு காலை நேரத்தில் ஒரு வருத்தமான செய்தியோட உங்களைப் பார்க்க வந்திருக்கோம். உள்ளே போய்ப் பேசலாமா?''

அவள் குழப்பமாய்த் திரும்பி நடக்க, விவேக்கும் இன்ஸ்பெக்டரும் தொடர்ந் தார்கள். முன்னறையிலேயே பெரிதாக்கப் பட்ட போட்டோவில் பூபேஷ் முன் பற்கள் தெரியச் சிரித்தார். அறையின் மையத்தில் அரை வட்டமாய்க் குஷன் வைத்த நாற்காலி கள், ஒரு நீளமான டீபாய், அதன் மேல் பிளவர் வாஸ்... அதில் சொருகப்பட்ட பிளாஸ்டிக் பூக்கொத்துக்கள்.

''உட்காருங்கள்'' – அந்தப் பெண் சொல்ல உட்கார்ந்தார்கள்.

''என்ன விஷயம்...?''

விவேக் கேட்டான். ''வீட்டில் வேறு யார் இருக்கிறார்கள்?''

''என்னுடைய ப்ரதர் ஹரீஷ்.''

''கூப்பிடுங்கள்.''

கவலையாய் யோசித்து, அவள் உள்ளே போனாள். ஐந்து நிமிஷம் கழித்துத் தூக்கம் மிச்சம் இருந்த கண்களோடும், இடுப்பில் தொய்வாய்க் கட்டிய லுங்கியோடும், உயர மான அந்த இளைஞன் சாவதானமாய் அவளோடு வந்தான். பிறிடும் கொட்டாவி யோடு கேட்டான்.

''க்யா சமாச்சார் இன்ஸ்பெக்டர்?''

''பஹ்லே... ஆப்.. பைட்டியே னா... ப்ளீஸ்...''

அந்த ஹரீஷ் உட்கார்ந்தான். விவேக் ஆங்கிலத்தில் கேட்டான்.

''உங்களுடைய அப்பா பூபேஷ் காலை யில் எத்தனை மணிக்கு வெளியே போனார்?''

அவன் தன் முகத்தை இரண்டு கைகளா லும் வழித்து விட்டுக் கொண்டு, நிமிர்ந் தான். ''அப்பாவா?''

''ம்.''

''எனக்குத் தெரியாது. அவர் நான்கு









— வளர்மதி ஆசைத்தம்பி.

மணிக்கெல்லாம் எழுந்து, ஜாக்கிங் போய் விடுவார். நான் எட்டு மணி வரைக்கும் தூங்குகிற ஆசாமி. சோபியா! அப்பா எப்போ வெளியே போனார்?'' — ஹரீஷ் அந்தப் பெண்ணை ஏறிட்டபடி கேட்டான்.

அவள் சொன்னாள்.

''நாலு மணிக்கு.''

''தினசரி ஜாக்கிங் போவாரா?''

''ஆமாம்...''

''அவர் மட்டும் போவாரா..? இல்லை கூட யாராவது?''

''அவர் மட்டும்தான் போவார்.''

''ஜாகிங் எது வரைக்கும் போவார்?''

''விக்டோரியா கார்டன் வரைக்கும்.''

''எத்தனை மணிக்குத் திரும்புவார்...?''

''வீட்டுக்குத் திரும்புவது இத்தனை மணிக்குத்தான் என்று நிச்சயமாய்ச் சொல்ல முடியாது. அப்பா சில சமயம் ஜாக்கிங் போய்விட்டு, வான்கடே ஸ்டேடியம் போய் விட்டு, ட்ரெயினர்ஸைப் பார்த்து விட்டு, பத்து மணிக்கு மேல் கூட வருவார்'' — சொன்ன சோபியா பதற்றமான குரலில் கேட்டாள்...

''ஏதோ வருத்தமான செய்தி என்று சொன்னீர்களே? ஒலிம்பிக் வீரர்களில் யாராவது கொலை செய்யப்பட்டு விட்டார்களா...?''

ஸ்லோமோஷனில் தலையாட்டிய விவேக், இறுக்கமான முகத்தோடு நிமிர்ந்தான். ''ஸாரி டு ஸே திஸ். மிஸ்டர் பூபேஷ் கொலை செய்யப்பட்டிருக்கிறார்... இன்றைக்குக் காலை... தகவல் கிடைத்து...''

சோபியா ஸ்தம்பித்துப் போக —

ஹரீஷ் — உட்கார்ந்திருந்த சோபாவை விட்டு ஒரு நேர்க் கோடு மாதிரி அதிர்ச்சியாய் எழுந்து நின்றான். விவேக் தொடர்ந்தான்.

''பாடி போர்பந்தர் ஏருக்கிடங்கில் கிடந்தது. இந் நேரம் போஸ்ட்மார்ட்டத்துக்காக ஜி.ஹெச். போயிருக்கலாம்...''

சோபியா வீறிட்டாள். ''பய்யா...!'' — ஓடி வந்து ஹரீஷை நீர் சிதறும் கண்களோடு கட்டிக் கொண்டாள். துக்கத்தை அடக்க முடியாமல் தத்தளித்துத் தலையை ஆட்டினாள். ஹரீஷ் கலங்கிய விழிகளோடு விவேக்கை ஏறிட்டான்.

''எங்கப்பாவோட மரணத்துக்குக் காரணமானவனைக் கண்டுபிடிச்சுட்டீங்களா?''

''நாட் யெட். வழக்கம் போல் இந்தியக் கழுகுகள் என்று குறிப்பிட்டு, ஒரு குறிப்பு மட்டும் கிடைத்திருக்கிறது! ஹரீஷ்! உங்களுடைய ஃபாதர் பூபேஷுக்கு இந்தியக் கழுகுகளின் மிரட்டல் பற்றிய விவரம் தெரியும். தெரிந்திருந்தும் ஆபத்தை விலை கொடுத்து வாங்குகிற மாதிரி, எதற்காக அந்தக் காலை நேரத்தில் ஜாக்கிங் போக வேண்டும்..? நீங்களோ... உங்கள் சிஸ்டர் சோபியாவோ... போகக் கூடாது என்று சொல்லவில்லையா?''

''நேற்றுக் கூடச் சொன்னோம். ஆனால் அவர் அதைக் கேட்கவில்லை. அப்பாவுக்கு எதிலும் துணிச்சல் அதிகம். மற்றவர்களுக்கு ஏதாவது ஒன்று என்றால் தீவிரமான பாதுகாப்பு ஏற்பாடுகளைச் செய்வார். ஆனால், தம்மைப் பற்றி அவர் எப்போதும் கவலைப் பட மாட்டார்.''

''அவருடைய அறை எது...?''

கண்களில் வழியும் நீரோடு, சோபியா இரண்டு கைகளாலும் தலையைப் பிடித்துக் கொண்டு உட்கார, ஹரீஷ் விவேக்கையும் இன்ஸ்பெக்டரையும் உள்ளே அழைத்துக் கொண்டு போனான்.

இரவு மணி ஒன்பதரை.

ஹோட்டலின் அறைக்கு வெளியே இருந்த சிட்—அவுட்டில், இரண்டு குடை நாற்காலிகளில் நிரம்பியிருந்தார்கள் விவேக்கும் ரூபலாவும்.

''மினிஸ்டர் காமோத்கிட்டே போய்ட்டு வந்ததிலிருந்து 'உம்'னு இருக்கீங்களே...? மனுஷன் செம டோஸ் விட்டாரா...?'' — ரூபலா புன்னகையோடு கேட்டாள்.

''கமிஷனர் ஹில்தான் வாங்கிக் கட்டிக்கிட்டார்.''

# ஃபைப்ரோபிளெக்ஸ்




## அனைவரும் விரும்பும் மெத்தைகள்

IS : 8391



முத்திரைக்கு அனுமதி பெற்றது



Manufacturers :
**BHARAT MOTORS**
**SALES & ADMINISTRATIVE OFFICE**
151, Mount Road, Madras – 600 002
Tel : 861923 Tlx : 41-6136 BM IN

FACTORY :
Industrial Estate,
Pettai, Tirunelveli – 627 010
Tel : 23622
Tlx : 0433 225 BM IN

**DEALERS IN TAMILNADU**

MADRAS CITY

**AMINJIKARAI Vasana Stores**, 735, P.H. Road **Ph : 664594** ● **ANNA NAGAR Shreyas & Co**, 105, 2nd Avenue **Ph : 619929 M.A. Verghese & Sons**,. 119, W. Block **Ph : 612984** ● **BROADWAY Ramji Steel Furniture**, 6, Police Line **Ph : 21986** ● **CHETPUT Nathan Furnishing House**, 16, Spur Tank Road **Ph : 663962** ● **CHROMEPET Alankar**, Vetri Theatre Complex **Ph : 403974** ● **MYLAPORE Select & Co**, 86, 87, Shopping Centre **Ph : 76721** ● **NUNGAMBAKKAM Ess Vee Enterprises** Kaygee A/C Super Market, 31, Village Road ● **PARK TOWN P. Doss & Co.**, 29, 30, Evening Bazaar **Ph : 564340** ● **PERAMBUR Sri Venkateswara Furniture**, 188, Perambur Barracks Road **Ph : 39989** ● **ROYAPETTAH Arasan Engineering Enterprises**, 164, Peters Road, **Ph : 862020. A.K.K. Traders**, 237, Royapettah High Road **Ph : 863745 Jayabharatham Furniture and Appliances**, 18, Royapettah High Road **Ph : 861384 Karnataka Foam & Coir Company**, 133, Pycrofts Road, **Ph : 832997.** ● **TAMBARAM Alankar**, 17-B, Shanmugam Road, **Ph : 403762** ● **TEYNAMPET A.C. Thiagarajan**, 9, Ramalinga Eswar Koil Street **Sonny's Carpets & Furnishing**, 89, Mowbrays Road **Ph : 453528 Vidhya Furniture**, Congress Buildings **Ph : 457671 PP** ● **TIRUVOTTIYUR Aruna & Company**, 340, T.H. Road, **Ph : 553644**

**CHINGELPATTU U.S. Furniture**, 3A, G.S.T. Road **Ph : 248** ● **CUDDALORE Mahalakshmi Traders**, 22-A, Car Street, ● **CUMBUM Jeya Coir Industries Ph : 466** ● **DHARMAPURI Gowri Agencies** Arumuga Achari Street **Ph : 6280 Vishal Marketing Associates**, Nethaji By-Pass Road **Ph : 6941 PP** ● **ERODE Rani Furniture** 26, Prakasam Street ● **KALLAKURICHI M/s. Sri Vasavi Furnitures**, 5, Katcheri Road ● **KANCHIPURAM Stylo Steel Furniture**, East Raja Street ● **MADURAI Joy Enterprises**, 10, TPK Road, **Raja Furniture**, 12, West Avanimoola Street **Ph : 30659** ● **MAYILADUTURAI K.V.S. & Company** Furniture Mart **Ph : 2765 Maruthi Rexine Centre**, 112A, Ist Floor, ● **NAGAPATTINAM Kaleeswari Enterprises**, 33, Nanayakkara Street ● **NAGERCOIL Havitat**, 170, Balmore Road **Santhosh Agencies**, 1/C, North Sarguna Veedhi **Ph : 3216** ● **OOTACAMUND M.E. Moosa Sait & Sons**, Noor Bldgs., Main Bazzar **Ph : 2305** ● **RAJAPALAYAM Anantham Angadi**, 313, Mudangiar Street ● **SALEM Guptha Furniture**, No. 7, Periyar Buildings **Ph : 62065 PP Shaarada Sales Agency**, 38, Vasavi Mahal **Ph : 63476** ● **SATYAMANGALAM P.N.N. Enterprises**, 388/D, Bazaar Main Road ● **TANJORE Sri Devi Agencies**, 1514, South Rampart, **New Sakthi Cycle Mart** 1286, South Main Street ● **TIRUKOIYULUR C.S. Moorthi Agencies**, 102 North Veedhi ● **TIRUPUR G.G. Home Decors**, 384, Best Complex, ● **TIRUVANNAMALAI Jai & Company**, No. 165-A, Car Street **Ph : 2988 PP Maruthi Sales Corporation**, 3-D, Car Street **V.G. Panneerdas & Company**, 163/6, Car Street **Ph : 2664 Vinayak Sales Co.**, No. 1, Chinna Kadai Street, ● **TRICHY Jyoti Furnitures**, 74, Madurai Road **Ph : 26523 Kairasi Enterprises**, 17-A, Madurai Road **Ph : 26352 PP** ● **TUTICORIN Sathya Agencies**, 370, Palayamkottai Road **Ph : 370** ● **VELLORE Sabari Agencies**, Shop No. 2, Kartik Building ● **VILLUPURAM Siva Steel House**, 172, Nehruji Road **Ph : 2065 Suresh Agencies**, 57, Nehruji Road **Ph : 2114 PP** ● **VIRUDACHALAM Trichy Ganesan Stores** 819, Junction Road **Ph : 126 PP** ● **VIRUDHUNAGAR Jebam Enterprises**, 128/5, Ramamoorthy Road **Ph : 3512 PP**

**PONDICHERRY Sundaram & Company** 188-A, Anna Salai **Ph : 23222 Vinod Steel Agency**, G.F. 50, J.N. Street **Ph : 2168 Paul Industry & Agencies**, 68, Second Cross Road **Ph : 24616**



# இராம மந்திரம்



'ராமா' என்ற மந்திரத்தின் பொருள் மகிழ்விப்பவன் என்பதாகும். ராம மந்திரத்தை உச்சரிக்கும்பொழுது உள்ளிருக்கும் ஆனந்தத்தை மறைத்துக் கொண்டிருக்கும் திரை விலகுகிறது. உள்ளிருக்கும் ஆனந்தம் அப்பொழுது தங்குதடையின்றி வெளிப்படுகின்றது. சதா மகிழ்வுற்றிருப்பது யோகத்தின் பாங்கு ஆகும். ராம மந்திரத்தை உச்சரித்தால் ஒருவன் யோகி ஆகலாம். அப்படி ராம மந்திரத்தை உச்சரித்து வால்மீகி என்னும் மஹரிஷி யோகியானார்.

தாரக மந்திரம் என்று சொல்லப்படும் ராம மந்திரத்தைச் சிவனார் இடைவிடாது உச்சரித்து வருகிறார்.

ஸ்ரீ ராமகிருஷ்ணர் காசிக்கு சென்றிருந்தார். அங்கு அவர் ஞானக் காட்சியில் இவ்வுண்மையைக் கண்டார். காசியில் உடலை உகுக்கின்றவர்களுக்கு முக்திக்கு இடைஞ்சலாக இருக்கும் கர்மத்தை மாதா அன்னபூரணி ஒதுக்கி வைக்கின்றனர். காசியில் உடலை உகுக்கும் ஜீவனுடைய காதில் சிவனார் ராம மந்திரத்தை ஜீவன் வாங்கிக் கொண்டு கிரம முக்திக்கு போகின்றான்.

கந்த புராணத்தில் காசி காண்டத்தில் சொல்லப்பட்டுள்ள இந்நிகழ்ச்சி ஸ்ரீ ராமகிருஷ்ணருக்கு ஞானக் காட்சியாக தென்பட்டது.

சிவனார் ஓதும் மந்திரம் ராம என்னும் தாரகப் பிரம்மமாகும். அது எத்தகையது. அது சிவனாருடைய சொருபமேயாகும். சிவனாருடைய சொரூபத்திற்கு அது புறம்பானதன்று. ஹரா என்பது சிவன் அம்சம். உமா என்பது அம்பிகையின் அம்சம். சிவ சக்தியாகப் பிரிக்க முடியா அர்த்தநாரீசுவரராகச் சிவன் இருக்கின்றார். மராமரா என்று சொன்னது எப்படி ராம என்று ஆனதோ அப்படி ஹரா உமா, ஹரா உமா, ஹரா உமா என்று சதா சொல்லிக்கொண்டே இருந்தால் அது ராம என்னும் மந்திரம் அமைந்திருக்கின்றது.

எனவே, ராம என்னும் மந்திரம் தசரதுடைய காலத்தில் வந்ததன்று. அது அனாதி. சதா இயற்கையில் பிரணவத்தினுடைய அம்சமாக பிரம்மமாக இந்த ஓசை இருந்து கொண்டிருக்கிறது.

ஆதாரம்: தர்மச்சக்கரம்

---

''பாவம்...! பூபேஷைக் கொலை பண்ணு வாங்கன்னு யார்தான் எதிர் பார்த் தாங்க?''

''மினிஸ்டர் காமோத்துக்கு இப்பத்தான் இந்தியக் கழுகுகளைப் பற்றி ஒரு ஸீரியஸ் னஸ் வந்திருக்கு. போட்டிருக்கிற குல்லாயை நிமிஷத்துக்கொருதரம் கழட்டிக் கழட்டி வேர்வையைத் துடைச்சுக்கிட்டார். பான் போடறதையே மறந்துட்டார்.''

''இன்ஸ்பெக்டர் வர்மா ஒரு 'பைக்' கார னைத் தொரத்திக்கிட்டு போனாரே? யாரை யாவது மடக்கினாரா?''

''ஊஹூம்'' பெருமூச்சு விட்ட விவேக், ''ரொம்ப நாளைக்கு அப்புறம் ஒரு உலக மகா தலைவலி கேஸ்ல மாட்டிக்கிட்டேன். 'இந்தியக் கழுகுகள்' என்கிற ஒரே ஒரு வார்த்தைதான் இந்தக் கேஸ்ல வெளிச்சமா இருக்கு. மற்றபடி - எல்லாமே இருட்டு. அவங்க நம்மைப் பார்க்கிறாங்க. ஆனா நம்மாலே அவங்களைப் பார்க்க முடியலை. இது ஒருவகை கொரில்லாத் தாக்குதல் மாதிரி...''

ரூபலா கவலையாய், ''நீங்க அவங்களை ஸ்மெல் பண்றதுக்குள்ளே... அவங்க ஒலிம் பிக் பார்ட்டிஸிபேன்ட்ஸ் ஒவ்வொருத்தரை யும் முடிச்சுடுவாங்க போலிருக்கே?'' கன்னத்திற்கு முட்டுக் கொடுத்தாள்.

''விடக் கூடாது.''

''என்ன பண்ணப் போறீங்க?''

''மனசுக்குள்ளே ஒரு திட்டம் அரும்பிட் டிருக்கு.''

''என்ன திட்டம்?'' — ரூபலா ஆர்வமாய்க் கேட்க, விவேக் அவளுக்குப் பதில் சொல் லாமல், ஹோட்டலுக்கு எதிர்ப்புறம், நூறு மீட்டர் தொலைவில் நின்றிருந்த அந்த உயரமான கட்டடத்தின் உச்சியையே உன்னிப்பாய்ப் பார்த்துக்கொண்டிருந்தான்; தீர்க்கமான பார்வை.

''என்ன பார்க்கறீங்க..?''

''ரூபலா'' — விவேக் கிசுகிசுப்பாய்க் கூப் பிட்டான்.

''ம்..''

''அந்த ஊதா நிற நியான் போர்டுக்குப் பக்கத்துல ஒரு கட்டடம் தெரியுதே?''

''ஆமா...''

''அதனோட இடது பக்க உச்சியைப் பாரு.''

ரூபலா பார்த்தாள். ''அங்கே என்ன?''

''ஓர் ஆள் நிக்கிற மாதிரி தெரியலை...? ஊதா நிற நியான் லைட் அணைஞ்சு எரியும் போது பாரு.. அந்த விநாடிதான் உருவம் கண்ணுக்குச் சிக்கும்.''

ரூபலா உன்னிப்பாய்ப் பார்த்தாள்.

''அடே! ஆமா...ம்.. ஓர் ஆள் நின்னுக் கிட்டிருக்கான். கையில நீளமா என்னத் தையோ வெச்சிருக்கான்.''

ரூபலா சொல்லிக் கொண்டிருக்கும் போதே, அவன் கையிலிருந்த அந்த நீள மான வஸ்து உயர்ந்தது.

விவேக்கின் லேசர் கண்கள் சட்டென்று இரகித்தன.

அது ஒரு டெலஸ்கோப்பிக் ரைஃபிள்.

(தொடரும்)




— கடுவை. கோபால்சாமி.



''என்னண்ணே, கோவிச்சுக்கிட்டு எதிர்க்கட்சியில் இணையப் போறோம்னு தொண்டர்களோடு போனீங்க... இப் படித் தொங்கின முகத்தோடு திரும்பி வர்றீங்களே...?''

''சோடா பாட்டில் வீசுறது, சைக்கிள் செயின் சுழற்றுவது, நாற்காலிகள், மைக் குகளைப் பிடுங்கி எறியுறது. இதிலெல் லாம், குறைந்த பட்சம் நாலு வருஷ அனு பவமிருக்குன்னு நம்ம தலைவர்கிட்டே, ''தூர்நடத்தை'' சர்டிபிகேட் வாங்கிக்கிட்டு வந்தால்தான் கட்சியில் சேர்ப்பேன்னு எதிர்க்கட்சித் தலைவர் சொல்லிட் டார்...!''

— கரடிகுளம் ஜெயா பாரதிப்ரியா.

நீங்கள் கேட்டவை

— தராசு

* ஏலம்

* நிமர்த் தலைவிகள்

# டீ.வி.யில் பேச கருணாநிதி மறுத்து விட்டாரே?

* நம்பிக்கை வோட்டு?

* எம்.ஜி.ஆர். லட்சியம்.

* ஆர். ரத்தினசாமி, புன்செய்புளியம்பட்டி.

? 'சமீப காலத் தொலைக்காட்சி நாடகங்கள் கிண்டல் செய்யும் அளவுக்குத் தாழ்ந்த நிலையில் இல்லை' என்பது என் கருத்து. என்ன சொல்கிறீர்கள்?

! அவற்றின் இடத்தைத் தற்காலிகமாக அரசியல்வாதிகளுடைய செயல்களும் தேர்தல் வாக்குறுதிகளும் அறிக்கைகளும் பிடித்துக் கொண்டிருக்கின்றன!

* மு. எத்திராஜ், குடியாத்தம்.

? தமிழன்னை விருது பெற்ற எழுத்தாளர் சு. சமுத்திரம் பற்றி...?

! ஏன், பாக்கி பதின்மூன்று பேரை விட்டு விட்டீர்கள்!

* சி. மணி, புத்தனாம்பட்டி.

? 'டீ.வி.யிலும் ரேடியோவிலும் தேர்தல் பிரசாரம் செய்யப் போவதில்லை' என்று கருணாநிதி முடிவு செய்து விட்டாராமே?

! அந்த முடிவு அவர் நெடுங்காலமாகவே கூறி வந்துள்ள குற்றச்சாட்டுக்கு (இவை காங்கிரஸ் கட்சியின் பிரசார சாதனங்களாகி விட்டன) இசைவாக உள்ளது. மேலும் டீ.வி. நிலையம் விதித்த அநீதியான — ஜனநாயக விரோதமான நிபந்தனைகள் இந்த முடிவுக்கு அவர் வருவதை எளிதாக்கின.

* கே. கன்னியப்பன், வெம்பாக்கம்.

? தமிழக அரசுக்கு மிகக் கடுமையான நிதி நெருக்கடியாமே? ஆளுனர் என்ன செய்யப் போகிறார்?

! தமிழக அரசுக்கு மட்டுமில்லை ஸார், பாரத நாட்டுக்கே நிதி நெருக்கடி. நமது பொருளாதாரமே வெகு சீக்கிரம் நிலை குலைந்து போகும் என்று மத்திய அரசு நியமித்துள்ள நிதிக் கமிஷனின் தலைவரே — ஸால்வே — கூறி எச்சரித்துள்ளார். மத்திய அரசு உற்பத்திக்கு உதவாத செலவினங்களைக் குறைத்து இதே கொள்கையைப் பின்பற்றுமாறு மாநிலங்களையும் வற்புறுத்து

* டீ. வி. புறக்கணிப்பு

* பிடிக்கத் தடை?

கிற தார்மீக பலமும் துணிவும் பெற்றாலொழிய நாட்டில் நம் யாருக்குமே விமோசனமில்லை. துன்பம்தான் மிகும்.

* அர. மணிவண்ணன், சென்னை — 16.

? எந்தக் கட்சியுடைய தேர்தல் அறிக்கை தங்களைக் கவர்ந்தது?

! அரசியல், பொருளாதார அறிவு பெற்றவர்கள் ஒரு சிலரேனும் இந்தக் கட்சியில் இருக்கிறார்கள் என்று எண்ண வைத்தவை காங்கிரஸ் மற்றும் தி. மு. க. அறிக்கைகள். மற்ற இரண்டும் செல்லாக் காசு.

* பாக்கியமுத்து, திருச்சி — 20.

? 'என் தயவு இல்லாமல் யாரும் ஆட்சி அமைக்க முடியாது' என்று நெடுஞ்செழியன் கூறுகிறாரே? என்ன அர்த்தம்?

! தம்மை இப்போதே ஏலம்விட ஆரம்பித்து விட்டார் என்று அர்த்தம்!

* ஆர். மின்னல் ராஜன், திருச்சி — 8.

? இன்னமும் பிரபாகரனைப் பிடிக்க முடியாத அளவுக்கு அமைதிப் படைக்குத் தடையாக உள்ளது எது?

! பிரபாகரனைப் பிடிப்பது அமைதிப் படைக்கு நோக்கமாக இருந்ததா என்பதே சந்தேகமாக உள்ளது. என்றாவது ஒரு நாள் ஒரு ராணுவத் தளபதி தமது நினைவுகளை எழுதுவார்; அல்லது பேட்டி தருவார். அப்போது பல திடுக்கிட வைக்கும் ரகசியங்கள் அம்பலமாகும்!

* எம். சம்பத், வேலாயுதம்பாளையம்.

? 'கருணாநிதியை முறியடித்து எம். ஜி. ஆர். லட்சியங்களை நிறைவேற்ற காங்கிரசால் மட்டுமே முடியும்' என்று ப. சிதம்பரம் கூறுகிறாரே?

! காசிக்குப் போயும் கர்மம் தொலையலை என்கிற கதைதான். காங்கிரஸ் பதவிக்கு வந்தாலும் எம். ஜி. ஆர். லட்சியங்கள் தானா? அடக் கடவுளே! அதற்கு ஒரு ராஜீவும் மூப்பனாரும் எதற்கு? ஜெ — ஜா போதுமே!

* ஜி. நீலா, மன்னார்குடி.

? நம் நாட்டில் இதுவரை எந்த ஓர் அரசியல்வாதியும் ஊழல் குற்றச்சாட்டின் பேரில் தண்டிக்கப்படவில்லை என்பது பற்றி என்ன நினைக்கிறீர்கள்?

! வாக்காளர்கள் விழிப்புணர்வுடன் செயல்படுவதில்லை என்றும் உதயமூர்த்தி கூறுகிற நல்ல கருத்தை ஏற்கும் மனப்பக்குவத்தைப் பெறவில்லை என்றும்தான் நினைக்கிறேன்.

* சாஸ்திரி வெங்கடேஷ், கோழிக்கோடு.

? 'தமிழக அரசியலில் திடீர்த் தலைவிகள் உருவாகியுள்ளனர். தலை இருப்பவர் எல்லாம் தலைவி ஆகிவிட முடியாது' என்று ராதிகா கூறியுள்ளாரே?

! 'ராதிகா நீங்கலாக' என்று மனசுக்குள் சொல்லிக் கொண்டிருப்பார்!

* சாமா, சீர்காழி.

? பிராமணர் சங்கம் எடுத்த முடிவு குறித்து?

! ஜெயேந்திரர் இவர்களிடம் தோற்றுப் போனார்!

* பி. தனபால், காரைக்கால். *

? 'தமிழ்நாடு சட்டப் பேரவைத் தேர்தல் முடிவுகளைத் தம் மீது நம்பிக்கை வோட்டாகக் கருத முடியாது' என்று பிரதமர் கூறியிருப்பது பற்றி?

! முன்னெச்சரிக்கையாகக் கூறி வைத்திருக்கிறார். சட்டப்படி அவர் கூறுவது சரி. ஆனால் தார்மீகப் பண்பு, ஜனநாயகப் பண்பு, சிறந்த மரபு என்று பார்க்கப் போனால் அவர் வாதத்தை ஏற்க முடியாது. எத்தனை தடவை எத்தனை வரிப்பணத்தைச் செலவு செய்து கொண்டு வந்து பிரசாரம் செய்கிறார்! தமிழக மக்கள் அவரை நிராகரிப்பார்களானால் என்ன அர்த்தம்? ஆனால் அலகாபாத்துக்குப் பிறகே ராஜினாமா செய்யாதவர் இனிமேலா செய்யப் போகிறார்?

* கே. எஸ். குமார், மதுரை.

? கட்சிக் கூட்டங்களில் ஒன்றும் அறியாத சிறுவர்களைக் கோஷம் போட வைப்பது சரிதானா?

! உரக்கக் கேட்காதீர்கள். வோட்டுரிமை வயதைப் பதினெட்டிலிருந்து எட்டாகக் குறைத்து விடுவார்கள்!

* சிவராம், திருச்சி.

? பட்ஜெட்டுக்கான ஆயத்தங்கள் இப்போதே ஆரம்பமாகி விட்டதாமே?

! நிலக்கரி விலையை மத்திய அரசு உயர்த்தியிருப்பதைப் பார்த்தால் அப்படித்தான் தெரிகிறது. நிலக்கரியைப் பயன்படுத்தி உருவாகும் பல பொருள்களின் உற்பத்திச் செலவு அதிகரித்து அவற்றின் விலை கூடும். இப்படியே பட்ஜெட்டுக்கு முன்னதாகத் தனது கட்டுப்பாட்டுக்குள் உள்ள பல பொருள்களின் விலைகளை ஒவ்வொன்றாக மத்திய அரசு உயர்த்தி வரும் என எதிர்பார்க்கலாம். அப்புறம் பட்ஜெட்டில் தந்திரமாக வருமான வரியில் சிறிது சலுகை காட்டி நல்ல பெயர் சம்பாதித்துக் கொள்ள முற்படும்!

* ரூ. 20 பரிசு பெறுபவர்:

பி. தனபால்,.
115/1, பாரதியார் வீதி,
காரைக்கால் — 609 602.



✱ நியாய விலைக்கடை என்றாலே 'கேட்டது கிடைக்காது' என்கிற நிலையை மாற்றி எப்போதும் எல்லாப் பொருள்களும் கிடைக்க வழி செய்வோம்.

தமிழகம் முழுவதும் 20 ஆயிரம் பேருக்கு ஒரு முழுமையான மருத்துவ மனை என்ற விகிதத்தில் புதிய மருத்துவமனைகள் அமைப்போம்.

✱ ஓராண்டு காலத்துக்குள் அனைத்து கிராமங்களுக்கும் குடிநீர் வசதி ஏற்படுத்துவோம்.

அரசுப் பணிகளில் 30 சதவிகிதம் பெண்களுக்கு ஒதுக்குவோம்.

✱ ஏழை, நடுத்தர வர்க்கப் பெண்களுக்கு பட்டப்படிப்பு வரை இலவசக் கல்வி வழங்குவோம்.

நகரங்களிலும் கிராமங்களிலும் உழைக்கும் ஏழைப் பெண்களுக்கு பேறு காலத்தில் எட்டாவது மாதம் தொடங்கி, குழந்தை பிறந்தபின் இரண்டு மாதம் வரை மாதந்தோறும் உதவித் தொகையாக ரூ.50 வழங்க வழி செய்வோம்.

✱ பெண் கல்வியை ஊக்குவிக்க, ஏழைப் பெண்கள் எட்டாவது வகுப்புக்கு மேல் படித்திருந்தால் திருமண வேளையில் செலவுக்கு 5 ஆயிரம் ரூபாய் தர ஏற்பாடு செய்வோம்.

ஓராண்டு காலத்துக்குள் ஒரு லட்சம் பேருக்கு வேலை தரும் நடைமுறை சாத்தியமான திட்டத்தை நிறைவேற்றுவோம்.

✱ கழக ஆட்சியில் தொழில் துறையில் மூன்றாம் இடத்தில் இருந்த தமிழ்நாடு இன்று பதின்மூன்றாவது இடத்திற்குத் தள்ளப்பட்டு விட்டது! இதை மாற்றி – புதிய பொற்காலம் காண்போம்.

✱ திருவாரூர்த் தேரை ஓடவிட்டதும், மயிலாப்பூர் தெப்பக்குளத்தைத் தூர் வாரத் தொடங்கியதும் கழக அரசுதான். 'கோயில் கொடியவர் களின் கூடாரமாக இருக்கக்கூடாது' – என்பதுதான் எங்கள் கொள்கை.

இதற்காக திருச்செந்தூரில் நீதி கேட்டு நெடிய பயணம் மேற் கொண்டதை நினைவுப் படுத்த விரும்புகிறோம்.

எனவே, இந்து அறநிலையத் துறையைச் செம்மைப்படுத்த சமயச் சான்றோர்களைக் கலந்து பேசி ஆவன செய்வோம்.

அனைத்துக் கோயில்களும் செவ்வனே நடைபெற ஏற்பாடுகள் மேற் கொள்ளப்படும்.

# சொல்வதைச் செய்வோம்!
# செய்வதைச் சொல்வோம்!

'பாரத் ரத்னா' பட்டம் சூட்டிவிட்டு, அந்த ஆட்சியை முதுகில் குத்தி கவிழ்த்தது யார்?

அந்தக் கட்சியிலும், பிற கட்சிகளிலும் திட்டமிட்டுப் பிளவுகளை உருவாக்கியது யார்?

20 ஆண்டுகளுக்கு முன்பு தமிழ் நாட்டு மக்களால் புறக்கணிக்கப் பட்ட கட்சியினர்தான்!

போஃபர்ஸ் பீரங்கி வாங்கியதில் ரூ.64 கோடி லஞ்சம்
வெளிநாட்டு வங்கிகளில் அந்தக் கறுப்புப்பணம் பதுக்கல்
இங்கிலாந்தில் ஹெலிகாப்டர் வாங்கிய ஊழல்
மேற்கு ஜெர்மனி நாட்டில் நீர்மூழ்கிக் கப்பல் வாங்கிய ஊழல்

—இப்படி ஊழல் சாம்ராஜ்யம் நடத்திக் கொண்டிருப்போர் லஞ்சப் பணத்தை முன் வைத்து உங்களை அணுகுகின்றனர்.

**தி.மு.க. ஒன்றிற்குத்தான் தனிப்பெரும்பான்மை கிடைக்கும் நிலை இருக்கிறது.**

—அப்படி உங்கள் ஆதரவினைப் பெற்றிருக்கிற காரணத்தால்தான் 'பிரித்தாளும் சூழ்ச்சியில்' (இ) காங்கிரஸ் இறங்கியிருக்கிறது.

தேர்தலுக்குப் பிறகு எந்த அணியுடன் சேர்ந்தால் வழக்கம் போல் ஆளுநரைப் பயன்படுத்தி ஆட்சி அமைக்கலாம் — என்கிற சதிவலையை (இ) காங்கிரஸ் பின்னிக் கொண்டிருக்கிறது.

**—எனவே, பின்னால் (இ) காங்கிரசுடன் இணையப் போகும் அணியினருக்கு உங்கள் வாக்குகளைத் தவறிப் போய் அளித்து வீணாக்காதீர்கள்! — என்று பரிவுடன் கேட்டுக் கொள்கிறோம்.**

**நல்லாட்சியை — நிலையான ஆட்சியை — நிர்வாகத் திறன்மிகுந்த ஆட்சியை — தி.மு.க.தான் தரமுடியும்!**

ஆதரிப்பீர்
**உதயசூரியன்**



— தி.மு.க.

# ஒரு காதல் கதை

**அசோகமித்திரன்**

''ஏண்டா இன்னிக்கு ஆபீஸுக்குப் போகலே?''

அம்மாவின் கேள்விக்குப் பதில் தரக் கூடாது என்றுதான் சங்கரன் நினைத்தான்.

ஆனால் அம்மா மறுபடியும் கேட்டாள்.

''இல்லை.''

''ஏன்? உடம்பு சரியில்லையா?''

''இல்லை. வேலை முடிஞ்சுடுத்து.''

''வேலை முடிஞ்சுடுத்துன்னா?''

''ஆறு மாசத்துக்குன்னுதான் சொல்லி வேலைக்கு எடுத்துண்டாங்க. நேத்தியோட ஆறு மாசம் முடிஞ்சுடுத்து.''

''நீட்டிப்பாங்கன்னு கந்தசாமி முதலியார் சொன்னாரே?''

''இல்லை.''

அம்மாவின் முகத்தில் துக்கமும் கோபமும் ஒரு சேரத் தெரிந்தது. அவன் பொறுப்பேயில்லாமல் வேலையைப் போக்கடித்துக் கொண்டு விட்டான் என்றுதான் அவள் நினைத்துக் கொண்டிருக்க வேண்டும்.

சங்கரன் எழுந்து படுக்கையை நன்கு உதறி விட்டு மடித்தான். அறை ஓரத்தில் வைக்கப்பட்டிருந்த படுக்கைக் குன்று மீது தன்னுடையதையும் வைத்தான். ஒரு கணம் அசைவில்லாமல் இருந்து உடனே அத்தனை படுக்கைகளும் அவன் பக்கம் சாய்ந்தன. சங்கரன் அவற்றைச் சீராக அடுக்கி வைத்தான்.

அவனுடைய தம்பி தங்கைகள் அதற்குள் குளித்து விட்டுச் சாப்பிட்டுக் கொண்டும் இருந்தார்கள். தம்பிக்குப் பத்தே காலுக்குத்தான் கல்லூரி. ஆனால் அவன் எட்டரை மணிக்கே பஸ் ஸ்டாப்பில் போய் நின்று கொண்டிருப்பான். காலையில், அந்த வேளையில், பஸ் ஸ்டாப்பிங்கில் வெறுமனே நிற்பது ஒரு மகிழ்ச்சிகரமான அனுபவம். சங்கரனுக்கும் அப்படித்தான் இருந்தது. ஆனால் அவன் வேலைக்கு என்று போகத் தொடங்கிய போது பஸ் ஸ்டாப்பில் வெறுமனே நிற்பது அவ்வளவு மகிழ்ச்சி தரவில்லை. மாணவன் என்ற அந்தஸ்து போனவுடனேயே சுதந்திரம் போய் மூப்பு வந்து விட்டது. இப்போது எந்தத் தெரு முனையிலும் நிற்பது பொருத்தமில்லாததாகப் பட்டது. இன்னும் சொல்லப் போனால் ஒரு வயது முதிர்ந்த சோதாவாகத் தான் தோற்றம் கொள்வது போலிருந்தது.

''அம்மா, எனக்குக் காப்பி வேண்டாம். நானும் சாப்பிட்டுடறேன்.''

''குளிக்கவாவது செய்வியா?''

''எல்லாம் குளிச்சுட்டுத்தான்.''

''அப்பச் சித்த இரு. இவா எல்லாரும் கை அலம்பிண்டப்புறம் குளிக்கப் போகலாம்.''

''அப்பக் காப்பி கொடு.''

அம்மா பார்த்த பார்வை அவள் காப்பி கொடுப்பாள் என்ற நம்பிக்கை தோற்றுவிப்பதாக இல்லை. ஆனால் கொண்டு வந்து கொடுத்தாள். சூடாகக் கூட இருந்தது. அவனுக்குத் தெரியும் அவளுக்கும் தெரியும் அவனுக்கு ஏதாவது வேலை தாமதமில்லாமல் கிடைத்து விடும் என்று. ஆனால் நல்ல வேலை, நல்ல கம்பெனி என்று அமைவது பற்றிக் கூற முடியாது. இவ்வளவு நாட்கள் வேலை பார்த்த இடம் சிறந்த இடம். அங்கு மீண்டும் தற்காலிக வேலை கிடைக்கும். அங்கு யாராவது நீண்ட காலம் லீவில் போகும் வரை காத்திருக்க வேண்டும்.

சாப்பிட்டு முடித்தவுடன் வெளியே கிளம்ப ஆயத்தமானான். ''எங்கேடா நீ வெளியே போறே? உன்னை வீட்டிலே வைச்சுட்டு நான் போய் உன் பெரியம்மாவைப் பாத்துட்டு வரலாம்னு இருந்தேன்'' என்று அம்மா சொன்னாள்.

''நானே அங்கேதான் போகக் கிளம்பினேன்.''

''சரி, நீயே போயிட்டு வா. அவ படுத்த படுக்கையானதிலேருந்து நீயெங்கே நீயெங்கேன்னுதான் கேட்டுண்டிருக்காளாம்.''

சங்கரன் வெளி வாசற்படியைக் கூடத் தாண்டி விட்டான். அம்மா கூப்பிட்டாள்.

''சங்கரா!''

''என்னம்மா?''

''ஒண்ணுமில்லே. அவ சாந்தியைக் கல்யாணம் பண்ணிக்கோன்னு உன்னைக் கேட்டாலும் கேட்பா. நீயும் அவ சாகக் கிடக்கிறாளேன்னு வாக்கு ஏதும் கொடுத்துடாதே.''

சங்கரன் புருவத்தை நெரித்தான்.

''நான் சொல்லறது புரிஞ்சுதா?''

சங்கரன் பதில் சொல்லாமல் விரைந்தான். அவனுடைய அம்மாதான் எவ்வளவெல்லாம் யோசித்து வைத்திருக்கிறாள்!

அவனுடைய பெரியம்மா பதினேழு வயதாகும் போது பெரியப்பா செத்துப் போய் விட்டார். பெரியம்மாவின் இரண்டாவது குழந்தை அவர் போய் மூன்று மாதங்களுக்குப் பிறகு பிறந்தது. பெரியம்மாவுடைய அண்ணாதான் அவளையும் இரண்டு குழந்தைகளையும் பொறுப்பேற்றுக் கொண்டார். இப்போது பெரியம்மா அறுபது வய

தாகி இன்றோ நாளையோ என்று கிடக்கிறான். அவளுடைய அண்ணா மன்னி எல்லாரும் போயாயிற்று. அண்ணாவுடைய கடைசிப் பெண் சாந்திக்கு இப்போது பெரியம்மாதான் ஏதாவது வழி செய்ய வேண்டும்.

பெரியம்மாவுடைய அண்ணாவும் ஆயுள் காலம் முழுக்கத் தற்காலிக உத்தியோகங்களாகத்தான் பார்த்தார் என்று அம்மாவும் சொல்லியிருக்கிறாள். பெரியம்மாவும் சொல்லியிருக்கிறாள். அவருக்கு ஓர் ஊரும் நிலைத்ததில்லை, வேலையும் நிலைத்ததில்லை. இதில் ஆறு பெண்கள். அவர் வீட்டில் பிள்ளையாக இருந்தது பெரியம்மாவின் இரு பிள்ளைகள்தான். அவர் காலத்தை ஓட்டி விட்டு எப்படியோ ஐந்து பெண்களுக்குக் கல்யாணம் பண்ணிப் புக்ககங்களுக்கு அனுப்பித்தாயிற்று. கடைசிப் பெண் வரை அவர் ஆயுள் காத்திருக்கவில்லை. இப்போது அந்தப் பெண்ணைக் கரையேற்றும் வரை பெரியம்மாவின் ஆயுளாவது காத்திருக்க வேண்டும்.

சங்கரனுக்குச் சாந்தி மீது கடுப்பு. அவனுடைய பெரியம்மாவிடம் அவள் ஒரு வேலைக்காரி போல நடந்து கொள்கிறாள் என்று கோபம். உண்மையில் அவள் அதிகம் பேசி, குழைந்து ஏதும் செய்ததில்லை. எதற்கெடுத்தாலும் அத்தை, அத்தை என்று உறவு கொண்டாடுவதும் கிடையாது. ஆனால் அவன் பெரியம்மா எந்த வேலை செய்ய வேண்டும் என்று சொன்னாலும் அதை அவள் ஏற்கெனவே செய்து முடித்திருப்பாள். "சரியான அடிமை கிடைச்சா பெரியம்மாவுக்கு," என்று சங்கரன் சொல்வான். "தாய் தகப்பன் இல்லாத பொண் அடங்கி ஒடுங்கித்தானே இருப்பா?" என்று அம்மா கேட்பாள்.

சாந்தி அவனுடைய பெரியம்மாவின்





''என்ன சார், இன்னைக்கு வழக்கத்துக்கு மாறாக இட்லி பஞ்சு போல இருக்கு?''

''சாரி சார். இருட்டுல உளுந்துக்குப் பதிலாப் பருத்திக் கொட்டையை ஊற வைச்சுட்டோம்!''

— கடுவை கோபால்சாமி.

---

வீடு என்றில்லை, எங்கு இருந்தாலும் ஓயாது உழைப்பாள் என்று சங்கரனுக்குத் தெரிந்து விட்டது. அவனுடைய அம்மாவுக்கே ஒரு சமயம் டைபாய்டு சுரம் கண்டிருந்த போது இரு மாதங்களுக்கு வீட்டைக் கவனித்துக் கொள்ளப் பெரியம்மா சாந்தியை அனுப்பியிருந்தாள். சங்கரன் வீட்டுக்கருகிலிருந்து சாந்தி கல்லூரி செல்ல நேரடி பஸ் கிடையாது. முக்கால் கிலோ மீட்டருக்கு மேல் நடந்து சென்று காலை வேளையில் பிதுங்கி வரும் பஸ்ஸில் தன்னை நுழைத்துக் கொண்டு கல்லூரி சென்று வர வேண்டும். அது தவிர ரேஷனை வாங்கி வர அவனுடைய தம்பியோடு சென்று வர வேண்டும். காஸ் தீர்ந்து போய் ஒரு வாரத்திற்கும் மேலாக மண்ணெண்ணெய் ஸ்டவ்வும் கரியடுப்பும்தான். இதெல்லாவற்றையும் சமாளித்துக் கொண்டு நடுவில் ஒரு ஹிந்திப் பரீட்சையும் அவள் எழுதி விட்டு வந்தாள். இதெல்லாம் சிறுகச் சிறுகத்தான் சங்கரனுக்குத் தெரிய வந்தது. அப்புறந்தான் சாந்தி ஒரு மனுஷியாக அவன் கண்ணில் தெரிய ஆரம்பித்தாள். அவனுடைய முகத்தில் அவள் தாய் தந்தையிழந்து உறவினர் ஆதரவில் இருப்பவள், விழித்திருக்கும் நேரத்திலெல்லாம் ஓயாது பிறருக்காக உழைப்பவள் என்றெல்லாம் தெரியாது. அவள் தனக்காக அனுமதித்துக் கொள்ளும் ஒரே ஒரு சலுகை முகப் பவுடர் ஒன்றுதான்.

பெரியம்மாவுக்கே ஆச்சரியம். ''வா, சங்கரா, வா.'' என்று ஆர்வத்தோடு வரவேற்றாள். ''அம்மாவுக்கு உடம்பு தேவலையா? நான்தான் அப்புறம் வந்து பார்க்க முடியலை. சாந்திதான் அடிக்கடி சொல்லிண்டிருப்பா.''

''என்ன சொல்லிண்டிருப்பா?''

''உங்க அம்மாவுக்கு இன்னும் பூரணமா குணமாகலேன்னு. சாந்திக்கு இன்னும் கொஞ்ச நாள் அங்கேயிருந்துண்டு அம்மாவுக்கு எல்லாம் சரியானப்புறம் வரணும்னு தான் ஆசை. உங்கம்மாதான் இனிமே நான் பாத்துக்கறேன், நீ போன்னுட்டாளாம்.''

''அப்படியா?''

''உனக்குத் தெரியாது?''

''உம்... தெரியும், தெரியும். சாந்தி எங்கே?''

''மூணே முக்கால் வரைக்கும் அவளுக்கு க்ளாஸ் இருக்கே — இனிமேத்தான் வருவா.''

சாந்தி வந்தாள். அவனுக்குத் திடீரென்று குளிரியது போலிருந்தது. அவள் புன்னகை புரிந்தாள். அவனுடைய அத்தைக்குக் காப்பி தயாரித்து அவனுக்கும் கொண்டு வந்தாள்.

பெரியம்மா காதுக்கெட்டாத தூரத்தில் இருந்த போது அவன் கேட்டான், ''எங்க அம்மாதான் உன்னைப் போன்னு சொன்னாளா?''

''இல்லியே?''

''உங்க அத்தைகிட்டே அப்படித்தான் சொன்னியாமே?''

சாந்தி பதில் பேசவில்லை.

சங்கரன் கேட்டான், ''எங்கம்மா உன்னைக் கோச்சுண்டாளா?''

''இல்லியே.''

''நீ ரொம்பப் பெரிய விஷயங்களுக்கெல்லாம் இல்லியே இல்லியேன்னு பதில் சொல்லி முடிச்சுடறே.''

''இல்லியே.''

இருவரும் சிரித்து விட்டார்கள்.

இப்போது பெரியம்மா அவனை வரவேற்கும் நிலையில் இருக்க மாட்டாள். பெரியம்மாவின் மகன்களில் ஒருவன் குடும்பத்துடன் வந்திருக்கிறான் என்று ஒரு வாரம் முன்பே தகவல் வந்தது. சாந்தி கல்லூரிக்குப் போயிருக்க முடியாது. வீடு நிறைய விருந்தாளிகளும் நினைவு விட்டு விட்டு வரும் பெரியம்மாவையும் விட்டு விட்டு அவளால் எங்கே போக முடியும்?

அவன் வீட்டை விட்டு வெளியே கிளம்பும் போது அம்மா செய்த எச்சரிக்கைக்கும் முன்பு சாந்தி திடுதிப்பென்று அவனுடைய அத்தை வீட்டுக்குத் திரும்பிப் போனதற்கும் சம்பந்தம் இருப்பது ஒரு மாதிரி தெரிந்தது. அம்மா பார்க்க அவனும் சாந்தியும் சிரித்துப் பேசிக் கொண்டார்களோ? அம்மாக்கள் மனசுதான் எவ்வளவு ஆழம்?

இவ்வளவு ஆழம் இருந்தும் ஏன் சில விஷயங்களில் இவ்வளவு சிறுமையுடனும் சுயநலத்துடனும் நடந்து கொள்ள முடிகிறது? இவர்கள் இப்படி நினைப்பதாலேயே எதிர்வினை போல 'ஆமாம், அப்படித்தான் போ' என்று சொல்லத் தோன்றுகிறது. பெரியம்மா எப்போதாவது அம்மாவுடன் இது பற்றிப் பேச்சு எடுத்திருப்பாளோ? சாந்தி போன்று ஒரு பெண் வீட்டுக்கு வர எவ்வளவு கொடுத்து வைத்திருக்க வேண்டும்?

பெரியம்மா விழித்திருந்தாள். அவனைப் பார்த்து, ''யார், சங்கரனா?'' என்று கூடக் கேட்டாள். சாந்தியின் நிழல் அறையில் எங்கோ விழுந்தது. முதல் முறையாக அது கவலையோடு இருப்பது போலத் தோன்றியது.

சங்கரனுக்கும் கவலை தோன்றியது.




## இந்த எல்லா நன்மைகளையும் உங்களுக்கு அளித்திட ஒரே ஒரு சேமிப்புத் திட்டத்தினால் மட்டுமே முடியும்.




## யூனிட் இணைந்த இன்சூரன்ஸ் திட்டம்.

ரூ.300 முதல் ரூ.4000 வரை செலுத்தப்படும் வருடாந்திர தொகைகளுக்கு யூனிட் இணைந்த இன்சூரன்ஸ் திட்டம் (யூலிப்) பலவித நன்மைகளை அளிக்கிறது.

வருமானவரிச் சட்டம் 80சி பிரிவின் கீழ் வரிவிலக்கு; மேலும் உயர்ந்த பட்ச வருமானம்; ஏனெனில் நீங்கள் செலுத்தும் தொகையின் பெரும் பங்கு யூனிட்டுகளில் முதலீடு செய்யப்படுகிறது. இதனால் உங்களுக்கு அதிக லாப பங்கு (டிவிடெண்டு) கிடைக்கிறது. (இவ்வருட டிவிடெண்ட் 13.50%)

ஆயுள் காப்பு (அதிக பட்சமாக ரூ.40000 வரையில்) மற்றும் ரூ.15000 வரையிலான இலவச விபத்துக் காப்பு.

இவைதவிர திட்ட முதிர்வில் முதிர்வு போனஸ் வழங்கப்படுகிறது.

முதிர்வு போனஸ் உடன் கூடிய சேமிப்பின் தோராயமான வளர்ச்சி

| திட்டத்தில் சேருகையில் வயது | இலக்குத் தொகை 10 வருட திட்டத்தில் ரூ.40000/- | இலக்குத் தொகை 15 வருட திட்டத்தில் ரூ.39000/- |
|---|---|---|
| 25 வருடம் | ரூ.74850/46 | ரூ.1,00,966.89 |
| 35 வருடம் | ரூ.74259/41 | ரூ. 99,302.72 |
| 45 வருடம் | ரூ.72338/47 | ரூ. 94,310.22 |
| 50 வருடம் | ரூ.70447/09 | ——— |

18 வயதுக்கு மேல் 50 வயதுக்கு உட்பட்ட எவரும் இத் திட்டத்தில் சேரலாம்.

எனவே, இன்றே சரியான முடிவு செய்யுங்கள். யூனிட் டிரஸ்டின் ஏஜெண்டுகள், முக்கிய பிரதிநிதிகள் அல்லது ஸ்பென்சர் அண்டு கம்பெனி அல்லது கனரா வங்கியின் கிளைகளை தொடர்பு கொள்ளுங்கள்.



**யூனிட் டிரஸ்ட் ஆஃப் இந்தியா**

(ஒரு பொதுத்துறை நிதி நிறுவனம்)
தலைமை அலுவலகம் பம்பாய் 400 020.

மண்டல அலுவலகம்.
43, செண்ட் லைன் பீச், சென்னை 600 001.
போன்: 580938 / 587433.

* ஹைதராபாத் கிளை: 203/204 மொகல் கோர்ட் காம்பலக்ஸ், இரண்டாவது மாடி பஷீர் பாத், ஹைதிராபாத் 500 001. போன் 240030 * விஜயவாடா கிளை: செல்லப்பள்ளி மாளிகை கவர்னர்பெட், விஜயவாடா 520 002. போன்: 63964 * பெங்களூர் கிளை: முதல் மாடி, சேம்பர் ஆப் காமர்ஸ் கட்டிடம், கே.ஜி.ரோடு பெங்களூர் 560 009. போன்: 28739 * திருச்சூர் கிளை: 12/817 தெக்கமடம் சாலை, திருச்சூர் 680 001. போன்: 24690 * கொச்சி கிளை: ஐந்தாம் மாடி, எல்.ஐ.சி. கட்டிடம், எம்.ஜி.ரோடு, எர்ணாகுளம், கொச்சி 682 011.

தமிழ்நாட்டின் எங்கள் முக்கிய பிரதிநிதிகள்
* கோயமுத்தூர், ஏ.தனபால், போன்: 34776. * மதுரை, எம். இராமமூர்த்தி, போன்: 36661/43179. * தஞ்சாவூர், கே. முத்துசாமி, போன்: 20374. * சேலம், என்.கே. இளங்கோவன், போன்: 51580.
* திருச்சி, எம். இராமலிங்கம், போன்: 41282.
* வேலூர், பி. நாராயணன், போன்: 21575.
* கடலூர், எஸ். பாலகிருஷ்ணன், போன்: 346/46.
* நாகர்கோவில், எஸ். உமாசு சந்திர போஸ், போன்: 4449. * குன்னூர், எம். மாதவன் நம்பியார், போன்: 6253/7037.




**உங்கள் சேமிப்பின் தொடக்கம் யூனிட்டுகளாக இருக்கட்டும்!**

Sista's-UTI.1032.88 TM B

பெரியம்மாவின் இரு மகன்களில் யார் சாந்தியைப் பார்த்துக் கொள்வார்கள்? சாந்தியுடைய ஐந்து அக்காக்களில் ஒருத்தி உள்ளூரில்தான் இருந்தாள். அங்கு போய்த் தான் சாந்தி இருக்க வேண்டும். அவளே மூன்று குழந்தைகளோடு கணவனின் அற்ப சம்பாத்தியத்தில் சிரமப்பட்டுக் கொண் டிருந்தாள். பெரியம்மா சாந்திக்கு ஏதாவது பணம் வைத்து விட்டுப் போனால் நல்லது. ஆனால் இரு மகன்கள் இருக்கும் போது அவள் பணத்தை அண்ணன் மகளுக்குத் தருவாளா? ஏதாவது நகை பாத்திரம் பண்டம் வேண்டுமானால் தரலாம். ஆனால் இருபது வயதுக்கு முன்பு விதவையானவளி டம் என்ன நகை இருக்க முடியும்?

அவன் பெரியம்மாவின் கையைப் பிடித் துக் கொண்டான். அவனுடைய அப்பா இருந்த வரையில் அற்பாயுசில் இறந்த அவருடைய அண்ணன் மனைவியை அவன் அதிகம் பார்க்கச் சந்தர்ப்பம் நேரிட்ட தில்லை. பெரியம்மாவும் அவ்வளவு நாளும் அவளுடைய அண்ணனுடன் எங்கோ ஊர் ஊராக மாறிக் கொண்டு இருந்து விட்டாள். ஐந்தாறு ஆண்டுகளாகத்தான் ஐம்பது காசு பஸ் கட்டணம் தூரத்தில் சாந்தியோடு குடி வந்த பிறகு தாயாதி உறவு மீண்டும் தொடங் கியிருக்கிறது. இப்போது கூடப் பெரியம்மா வின் மகன்கள் யாரும் வர இயலாது போய் விட்டால் அவன்தான் அவளுக்குக் கொள்ளி வைக்க வேண்டும்.

பெரியம்மா சாந்தியைப் பார்த்தாள். பிறகு ஈனசுவரத்தில் சங்கரனைக் கேட் டாள், ''இப்போ வேலைக்குப் போயிண் டிருக்கயோல்லியோ?''

''இல்லை.''

''இன்னும் வேலை கிடைக்கலே?''

''டெம்பரரி வேலைதான் கிடைச்சுண் டிருக்கு.''

''டெம்பரரியா?'' பெரியம்மா ஒருமுறை கண்களை மூடிக் கொண்டாள்.

சாந்தி பெரியம்மாவின் முகத்தைத் துடைத்து விட்டாள். பெரியம்மா மீண்டும் கண்களை விழித்துப் பார்த்தாள்.

''இவ அப்பாவுக்குக் கூடத்தான் எப்பப் பாத்தாலும் டெம்பரரி வேலைதான் கிடைச் சுது. கடைசியிலே என்னாச்சு? எல்லாரும் நடுத் தெருவிலே நிக்க வேண்டியதாச்சு.'' பெரியம்மாவுக்குப் பெருமூச்சு வாங்கியது. பேச வேண்டாமே என்பது போல் சாந்தி அவளுக்குத் தடவிக் கொடுத்தாள்.

''எனக்கு உடனே வேலை கிடைச்சுடும், பெரியம்மா. நாளைக்கே கூடக் கிடைச் சுடும்.''

பெரியம்மா கண் திறந்து சங்கரனைப் பார்த்தாள். அவன் வார்த்தையில் அவ ளுக்கு நம்பிக்கை ஏற்பட்டதாகத் தெரிய வில்லை.

''என்னமோப்பா, எல்லாரும் இரண்டு வேளை கூழோ கஞ்சியோ சாப்பிட்டுண்டு இருக்க முடிஞ்சா போறும்.''

சாந்தி தலைகுனிந்து இருந்தாலும் அவளுடைய கண்களில் கண்ணீர் ததும்பு வதை அவன் உணர முடிந்தது. அவள் மனத்தில் என்ன இருக்கிறதோ? அவளாக ஏதும் நினைத்து விட மாட்டாள். பெரி யம்மா! பெரியம்மா! இதோ நாங்கள் இரு வரும் உன்னருகில்தான் இருக்கிறோம். எங்கள் இருவர் பற்றி நீ நினை. ஏதாவது சொல்லு பெரியம்மா. பெரியம்மா....

அவனுடைய அம்மாவுடைய வார்த் தையை மீறுவதற்குத் தயாராக இருந்தும் அது பெரியம்மாவுக்குத் தெரியவில்லை. பெரியம்மா நினைவு தவறித் தூங்க ஆரம் பித்தாள்.

## அடுத்த இதழில்...

## கடத்தலைத் தடுக்கும் காவற்படை




- கவர்ஸ்டோரி




## வட்டமேஜை

# வாக்காளர்கள் சிந்திக்க வேண்டும்

* 'கடமையில் தவறினார் என். டி. ஆர்.' என்று சரியான நேரத்தில் சரியான முறையில் தலையங்கத்தை வெளியிட்டு இருந்தீர்கள். மிகவும் சிந்திக்கும்படியாகவும் இருந்தது. வெல்டன் சார்!

சென்னை — 23, அயன்புரம் சிவாஜி பாபு.

* என். டி. ஆரை விமர்சித்து (தலையங்கம்) ஒரு பக்கமும், அவரின் சாதனை (6 கோடி ரூபாய் செலவில் புத்தர் சிலை) பற்றி மறு பக்கமும் பிரசுரித்திருப்பது, கல்கியின் நடுநிலைமை நன்றாகப் படம் பிடித்துக் காட்டுகின்றது.

திருச்சி — 2, ஆற்காடு எழிலன்.

* தங்களின் தலையங்கம் படித்ததும் மிளகாய் கடித்தது போல் 'சுருக்'கென்றிருந்தது. இது மற்ற மாநிலத் தலைவர்களுக்குப் (முதல்வர்கள்) பாடமாக அமைந்து, மீண்டும் இது போன்ற தவறுகள் நடக்காமல் இருக்க வேண்டும் என்பதே நமது ஆசை.

கும்பகோணம், கவிட் ரவி.

* 'இரும்புத் திரை இளகுகிறதா?' இவ்வார அட்டைப்படக் கட்டுரை தற்சமயம் ரஷ்யாவில் என்ன நடக்கின்றது என்பதை அழகாகப் படம் பிடித்துக் காட்டியது.

மதுரை — 16, பி. ராஜசேகரன்.

* உலக சமாதான மனிதர் மிகையில் கோர்பச்சேவின் கல்கி அட்டைப் படம் எங்கள் கைகளில் தவழும் போது எங்களுக்குப் பெருமையாக உள்ளது.

சங்கராபுரம், கே. எஸ். முருகன்.

* நடுத்தர வர்க்கத்தினர் படும் அவஸ்தைகளைக் கண் முன் கொணர்ந்திருந்தார், 'ராம பாணம்' சிறுகதையில் கோபுல் ஸ்ரீ!

குடியாத்தம், கே. பி. ஷர்மா.

* 'இக்கரைக்கு அக்கரைப் பச்சை' என்ற பழமொழிக்கு மிகப் பொருத்தமான உதாரணமாக அமைந்துள்ளது. 'காணத் தவறிய வண்ணங்கள்', சிறுகதை. கதாசிரியருக்கு எனது பாராட்டுக்கள்.

திருச்சி — 4, ரா. ஸ்ரீதரன்.

* ''ராஜீவ் ஜினோவுக்குச் செல்லத் தயார் நிலையில் வைக்கப்பட்டிருந்த ஒரு வி. வி. ஐ. பி. விமானம் வேண்டாம் என ஒதுக்கப்பட்டது. காரணம், முக்கியமான பல ஒயர்களை எலி கடித்துப் பாழாக்கி விட்டதாம்!'' என்ற செய்தியை இவ்வாரக் கல்கியில் படித்தேன். இந்தியாவின் உயர்வையே பல (அரசியல்) ஊழல் பெருச்சாளிகள் கடித்துப் பாழாக்கிக் கொண்டிருக்கும் போது ஒரு விமானத்தின் ஒயர்கள் எலியால் கடித்துப் பாழானதில் ஒன்றும் அதிசயமில்லை!

தஞ்சை, கவிஞர். வெற்றிப் பேரொளி.

* 'மதுரைக்காரத் தம்பி'யில் வரும் உயரமான கதாநாயகி ராதா இல்லை. ஸ்ரீபாரதி.

பள்ளத்தூர், இம்ரான்கான்.

* 'தேர்தல் சானல்' மிக மிக அருமை. அமைத்த அகிலா கார்த்திகேயனை எப்படிப் பாராட்டுவதென்றே தெரியவில்லை!

கோவை, உமார்த்தி.

* 'மாணவர் நலனுக்கு ஒரு மையம்' கட்டுரை கண்டேன். வெறுமனே பட்டதாரிகளை மட்டும் உருவாக்காமல், அவர்களுடைய நல்வாழ்விற்குத் தகுந்த ஆலோசனைகளை வழங்கியும், மேலும் அவர்கள் சுயமாகத் தொழில் தொடங்க உதவி புரியும் வைணவக் கல்லூரி மாணவர் ஆலோசனை மையத்தை நினைக்கும் போது பெருமிதமாக உள்ளது. தமிழகத்திலுள்ள அனைத்துக் கல்லூரிகளும் இம்முறையைப் பின்பற்றலாமே!

தக்கோலம், ஆ. புகாரி.

* லால்குடியின் சீடர் ரவியிடம் வசூலிக்கப்பட்ட லக்கேஜ் கட்டணமான ரூ. 72/-ஐ, அவருக்குத் திருப்பிக் கொடுக்கவும், சங்கீதக் கருவிகள் ஒவ்வொன்றிற்கும் 45 கிலோ எடைக்கான லக்கேஜ் கட்டணம் வசூலிக்கப்பட வேண்டும் என்ற தற்போதைய விதியை மாற்றி, அக்கருவிகளைப் பயணிகளின் பிற லக்கேஜ்களின் எடையோடு சேர்த்துக் கொள்ள வேண்டும் என்றும் தற்போது ரயில்வே நிர்வாகம் உத்தரவு பிறப்பித்துள்ளதைத் தங்கள் கவனத்திற்குக் கொண்டு வருகிறேன்.

ஈரோடு, சி. நாச்சிமுத்து.

* 'படிப்பைக் காட்டி, பட்டத்தைக் காட்டிப் பிழைப்பு நடத்துகிறோமே ஒழிய, படிப்பை வாழ்க்கைக்குப் பயன்படுத்துவதில்லை என்ற உதயமூர்த்தியின் வார்த்தைகள் மிகச் சரியானவை.

வடலூர், எஸ். கண்ணன்.

* தமிழக சட்டசபைத் தேர்தல் நெருங்கிக் கொண்டிருக்கிறது. இந்த முறை நடக்கவிருக்கும் தேர்தல் ஒரு சிக்கலான தேர்தல் என்றே கூற வேண்டும். தமிழகத்தில் நல்லதொரு ஆட்சி அமையத் தமிழக மக்கள் ஒவ்வொருவரும் கல்கி இதழில் எம். எஸ். உதயமூர்த்தி அவர்கள் தொடர்ந்து எழுதி வரும் அற்புதமான கட்டுரைகளைப் படித்து ஆழ்ந்து சிந்தித்துச் செயல்பட வேண்டியது மிகவும் முக்கியம். தமிழகத்தில் புதிய பெருச்சாளிகள் கொண்ட ஓர் அரசு அமைவதற்கு வழி அமைக்கப்படுமானால் அதனால் ஏற்படும் பின்விளைவுகளை மக்கள் அனுபவித்தேயாக வேண்டும். இதில் எந்தவித ஐயப்பாட்டிற்கும் இடமேயில்லை. பட்ட துயரங்கள் போதும். இனியும் அப்படிப்பட்ட துயரங்கள் மீண்டும் வராமலிருக்க, வோட்டுரிமை பெற்ற ஒவ்வொரு இந்தியக் குடிமகனும் ஆழ்ந்து சிந்தித்துச் செயல்படுவது ஒரு மகத்தான தேசியக் கடமையாகும்.

சென்னை — 41, கே. எஸ். பரமேசுவரன்.

**ராஜாஜி வாழ்க்கை வரலாறு — VI**

**ராஜ்மோகன் காந்தி**



வெளிப்படையாக......

# அணுகுண்டு அசுரனுக்கு எதிரான போராட்டம்!

**எ**ந்த ஒரு பதவியிலும் இல்லாததால் ஸி. ஆருக்கு இப்போது நேரம் இருந்தது. அந்த நேரத்தை அவர் கணமும் வீணாக்காது நாட்டு நலனுக்கு மட்டுமின்றி உலக நலனுக்கே கூடச் செலவிட்டு வந்தார். அணு ஆயுதங்களை அவர் "நவீன அசுரர்கள்" என்று வர்ணித்து, அவற்றுக்கு எதிராகப் போர் தொடுத்தார். இந்த தார்மீகப் போரின் தொடக்கம் 1954 இறுதியில் அவர் 'நியூயார்க் டைம்ஸ்' பத்திரிகைக்கு எழுதிய ஒரு கடிதத்தில் தொடங்கியது. 1300 வார்த்தைகள் கொண்ட அந்தக் கடிதம் முழுமையாகப் பிரசுரமாயிற்று! இதில் ஸி. ஆர்., 'எதிராளியை (ருஷ்யாவை) எதிர்பாராமல் அமெரிக்கா ஒருதலைப்பட்சமாகத் தானே முன்வந்து அணு ஆயுதங்களைத் துறக்க வேண்டும்' என்ற அறிவுரையைக் காரண காரியங்களோடு விளக்கி இருந்தார். தீர்க்கதரிசி விதைத்த அந்தக் கருத்து இருபத்தைந்து ஆண்டுகளுக்குப் பின் முளைவிட்டுச் செழித்து வளர்ந்தது. இன்று அமெரிக்காவில் மட்டுமின்றி ஐரோப்பாவிலும் பலர் இதே கருத்தை வலியுறுத்தி, ஓர் இயக்கமாகவே நடத்துகிறார்கள். ருஷ்ய, அமெரிக்கத் தலைவர்களிடமும் இது ஒரு பாதிப்பையும் ஓரளவு மனமாற்றத்தையும் உருவாக்கியுள்ளது.

அன்று ஸி. ஆர். எழுதினார்: "அமெரிக்காவோ அல்லது ருஷ்யாவோ இதனை ஆரம்பித்து வைக்கட்டும். பார்க்கப் போனால் முதன் முதலில் அணுகுண்டுகளை வீசிப் பெரும் பாவம் புரிந்த அமெரிக்காதான் அணு குண்டுகளைத் துறப்பதிலும் முதலடி எடுத்து வைக்க வேண்டும்! இதனை ஒரு தண்டனையாகவோ அபராதம் செலுத்துவதாகவோ அமெரிக்கா கருதத் தேவையில்லை. மாறாகத் தனக்கு வழங்கப்பட்டிருக்கும் ஒரு மதிப்புமிக்க கௌரவமாகவே எண்ணலாம். அமெரிக்காவால் இப்படி நடந்து கொள்ள முடியும்; அதற்குரிய தார்மீகத் துணிவு அதற்கு உண்டு என்று நான் கருதுகிறேன். மற்றவர்களும் உண்மை பேச வேண்டும் என்று எதிர்பாராமலே நாம் உண்மையைப் பேசுகிறோம்; மற்ற எல்லோரும் சரியாக நடந்து கொள்ள வேண்டும் என்று எதிர்பாராமலே நாம் அன்புடனும் கண்ணியமாகவும் கௌரவமாகவும் நடந்து கொள்கிறோம். அதே போல் 'அமெரிக்கா



...பேச்சு!

செய்யட்டுமே' என்று ருஷ்யா காத்திராமலும் 'ருஷ்யா செய்யட்டுமே' என்று அமெரிக்கா காத்திராமலும் அணு ஆயுதங்களை அனைவருமே ஒழித்துக் கட்டி விடலாம். அச்சம் என்பது இல்லாத புதிய உலகம் படைப்போம்."

'**ப**ரபரப்பான இந்த உலகின் ஒரு கவனிக்கப்படாத மூலையிலிருந்து இதனை எழுதுகிறேன்' என்று ஸி. ஆர். தமது கடிதத்தில் குறிப்பிட்டிருந்தார். அத்தகைய ஒரு கடிதத்தை அமெரிக்கத் தலைவர்கள் கவனிப்பார்கள்; கவனித்துச் செயலாற்றுவார்கள் என்று நிஜமாகவே ஸி. ஆர். நம்பினாரா? அது நமக்குத் தெரியாது. ஆனால் அவர் தமது மனச் சாட்சியின் உந்துதலால் இதனை எழுதினார் என்ற அளவுக்குத் தெளிவாய்ப் புரிகிறது. ஏனெனில் அவருடைய கவலை இன்று புதிதாகப் பிறந்தது அல்ல. உலக யுத்தத்தின் போது ஜப்பானுடைய போக்கும் யுத்த நோக்கும் அவருக்குக் கொஞ்சமும் பிடிக்காதவை. ஆயினும் அவர் ஹிரோஷிமாவையும் நாகஸாகியையும் தரைமட்டமாக்கியதைப் பலமாக எதிர்த்

திருந்தார். "இந்தப் புதிய கண்டுபிடிப்பு (அணுகுண்டு) இத்துடன் கண்காணாமல் மறைந்து போகும் என்று நம்புவோமாக" என்று குறிப்பிட்டிருந்தார். ஆனால் அதே சமயம், "இப்போது கிடைத்துள்ள விஞ்ஞானத் தகவல்கள் இதனை மேலும் அபிவிருத்தி செய்யப் போதுமானவையாக உள்ளன" என்ற அச்சத்தையும் ஸி. ஆர். வெளியிட்டிருந்தார்.

இன்று இந்தப் பிரச்னையை மீண்டும் எழுப்பி அபாயச் சங்கை ஊத வேண்டும், ஊதிக் கொண்டே இருக்க வேண்டும் என்று ஸி. ஆருக்குத் தோன்றியது. அதற்குரிய அவகாசமும் இப்போது அவருக்குக் கிடைத்தது. அமெரிக்கா அணு ஆயுத சோதனைகளையும் தயாரிப்பையும் நிறுத்தவில்லை என்பதற்காக அதனைக் கண்டித்தார். ஆனால் அதே சமயம் ஜூலை நான்காம் தேதி சுதந்திர தினத்தன்று அமெரிக்கத் தூதர்க அதிகாரிகளின் அழைப்பை ஏற்றுச் சென்று அமெரிக்காவுக்கு வாழ்த்துத் தெரிவித்தார்.

இதன் தொடர்ச்சியாக அவர் வெளியிட்ட ஒரு கருத்து, பிரதமர் நேருவுக்கு ஒரு தர்மசங்கடத்தை ஏற்படுத்தியது. அந்தக் கருத்து, "அமெரிக்கா அணுகுண்டைத் துறக்கவில்லையெனில் இந்தியா அமெரிக்க உதவியை மறுதளித்து விட வேண்டும்". என்பதுதான்!

**அ**ணு ஆயுதம் தொடர்பாக, 1955 இறுதியில் ருஷ்யா பக்கமும் தமது கவனத்தைத் திருப்ப ஸி. ஆருக்கு வாய்ப்புக் கிட்டியது. புல்கானினும் குருஷேவும் இந்தியாவுக்கு விஜயம் செய்தார்கள். சென்னைக்கும் வந்தார்கள். சென்னைக்கு அவர்கள் வருவதற்குச் சற்று முன்னதாகத்தான் ருஷ்யா, வரலாறு காணாத அளவில் பெரிய அணுகுண்டை வெடித்திருப்பதாகச் செய்தி வெளியாயிற்று. குருஷேவ் அது பற்றிப் பெருமையடித்துக் கொண்டார்! ருஷ்யாவும் அமெரிக்காவும் உலகின் சுற்றுப்புறச் சூழலையே கெடுத்து நாசமாக்கிக் கொண்டிருப்பதாகவும், அணிசேரா நாடுகள் இது குறித்து ஆட்சேபிக்க வேண்டும் என்றும் ஸி. ஆர். சொன்னார். குருஷேவும் புல்கானினும் சென்னையில் வந்திறங்கிய தினம், அவரது விமர்சனம் நாளிதழ்களில் இடம் பெற்றிருந்தது. அது போதாதென்று ஸி. ஆர். அவ்விருவருடனும் பேசுகையில் அணுகுண்டு விஷயத்தைப் பிரஸ்தாபித்தார். ஒரு விருந்தில் புல்கானினுக்குப் பக்கத்தில் அமர்ந்திருந்தார் ஸி. ஆர். அவரிடம் பேசுகையில், 'இந்தியாவின் புராதனமான — அற்புதமான கோயில்களும் நினைவாலயங்களும் அடிமைகளைக் கொண்டு உருவாக்கப்பட்டதாகக் குருஷேவ் சொன்ன கருத்து தவறானது' என்பதை முதலில் விளக்கினார். பிறகு, 'ருஷ்யா ஒருதலைப்பட்சமாக எதிராளியை எதிர்பாராமல் — அணு ஆயுதங்களைத் துறக்குமா?' என்று கேட்டார். 'அது நடக்காத காரியம்' என்றார் புல்கானின். 'அப்படியானால், இருதரப்பினரும் ஒன்று சேர்ந்து ஒரே சமயத்தில் அணு ஆயுதங்களைத் துறப்பதையும் அதனை மேற்பார்வையிட ஓர் அமைப்பு உருவாவதையும் ருஷ்யா நிபந்தனை ஏதுமின்றி ஒப்புக் கொள்ளுமா?' என்று ஸி. ஆர். வினவினார். 'ஒப்புக் கொள்ளும்' என்றார் புல்கானின்.

குருஷேவுடன் இரண்டு முறை பேசினார் ஸி. ஆர். சோவியத் விருந்தினருக்காக ஏற்பாடு செய்யப்பட்டிருந்த கலை நிகழ்ச்சியில் வசந்த குமாரி பாடிய போதும் சந்திரலேகா நடனமாடிக் கொண்டிருந்த போதும் ஸி. ஆரும் குருஷேவும் பேசிக் கொண்டிருந்தனர்! தமது சகா கூறிய அதே பதில்களை, அதே போன்று வெளிப்படையாகக் குருஷேவும் கூறினார். 'பலவீனம் என்று கருதப்படக் கூடிய எந்தக் காரியத்தையும் ருஷ்யா செய்யாது' என்றார் குருஷேவ்.

அணுகுண்டு அபாயத்துக்கு அடுத்தபடியாக 1956 — இல் ஸி. ஆரின் கவனத்தைக் கவர்ந்தது ஹிந்தி அபாயம்!

(தொடரும்)

---

வந்தவர் (டாக்டரிடம்): எனக்குக் கொஞ்ச நாட்களாய் மனம் பேதலிச்சுப் பயமாயிருக்கு டாக்டர்!

டாக்டர்: ஏன், ஏதாவது கெட்ட கனவு கண்டீங்களா ...?

வந்தவர்: இல்லே! எல்லாக் கட்சிகளின் தேர்தல் அறிக்கைகளையும் கவனமாய்ப் படிச்சேன் ...!

— காயாமொழி பானு அலி.



புதிய முதல்வருக்கு யோசனைகள்...





# மாதம் ஒரு மாவட்டம் செல்ல வேண்டும்...

• புதிய முதல்வர் தமிழ்நாடு தலைமைச் செயலகத்தில் அவருடைய அறையில் இருந்து தினம் எட்டு மணி நேரம் வேலை செய்ய வேண்டும். இந்த முன்னுதாரணத்தைப் பின்பற்றி, தமிழ் நாட்டில் உள்ள அரசாங்க அலுவலகங்கள் எல்லாம் ஒழுங்காக வேலை செய்யும். நாட்டில் எல்லா வேலைகளும் துரிதமாக நடக்கும்.

• புதிய முதல்வர் நேரடியாகவோ அல்லது மறைமுகமாகவோ லஞ்சம் வாங்கக் கூடாது. மற்ற மந்திரிகளையும் லஞ்சம் வாங்காதவாறு கண்காணிக்க வேண்டும். முதல்வர் சுத்தமாக இருப்பதன் மூலம்தான் அரசாங்க அலுவலகங்கள் எல்லாவற்றிலும் நிலவும் லஞ்சத்தை ஒழிக்க அவர் தார்மீக பலம் பெற முடியும்.

• புதிய முதல்வர் தமிழ் நாட்டைத் தொழில்மயமாக்க வேண்டும். இப்பொழுது ஒரு தொழில் ஆரம்பிக்க இடைஞ்சலாக உள்ள ஏகப்பட்ட விதி முறைகளைச் சுலபமாக்கி, மிகவும் குறுகிய காலத்துக்குள் ஒரு தொழிற் சாலையை நிறுவ அரசு வகை செய்ய வேண்டும். வெளி மாநிலத்தவரும், வெளி நாட்டவரும் தமிழகத்தில் தொழில் தொடங்குவதற்குச் சலுகைகள் தந்து, ஊக்குவிக்க வேண்டும்.

— டாக்டர். எஸ். நாராயணன், விழுப்புரம்.

• முதல்வர், அமைச்சரவையை அடிக்கடி கூட்டி, விவாதங்கள் நடத்த வேண்டும். பிறகு பொது மேடைகளில் பேசும் போது அமைச்சரவை முடிவுப்படியே கொள்கைகளை அறிவிக்க வேண்டும். சொந்தக் கருத்து, அரசின் கருத்து என்று ஒருவரே இரு கொள்கைகள் கூறிக் குழப்பக் கூடாது.

• ஒவ்வொரு மாவட்டத்திலும் ( மாதம் ஒரு மாவட்டம் என) முதல்வர், இரண்டு மூன்று நாள் முகாமிட்டு, பல்வேறு திட்டங்கள் எவ்வாறு செயல்படுகின்றன என ஆராய்ந்து, குறைகள் இருப்பின் அவற்றை நிவர்த்தி செய்ய நடவடிக்கை எடுக்க வேண்டும். அடுத்த சுற்று முகாமில் குறைகள் தீர்ந்தனவா என்று பரிசீலிக்க வேண்டும்.

• மந்திரிகளுக்கு வரவேற்பளிக்க அலங்கார வளைவுகள், தோரணங்கள் கட்டி, பொதுச் சாலைகளைப் பாழ்படுத்தக் கூடாது. அப்படிச் செய்பவர் மீது கடும் நடவடிக்கை எடுக்கச் சட்டம் இயற்ற வேண்டும்.

— ஈ. வெங்கடேசன், உடுமலைப்பேட்டை.

• மக்கள் சிறந்த கல்வியறிவு பெற்றால் நாடு உயரும். அதனால் 'எல்லா மக்களுக்கும் தரமான கல்வி' என்ற கொள்கையை விடாப்பிடியாகப் பிடித்துக் கொண்டு முதல்வர் முழு மூச்சுடன் செயல்பட வேண்டும்.

• எல்லாத் துறைகளிலும் போட்டி மனப்பான்மையை உருவாக்கினால் எதிலும் 'தரம்' தானாக உயரும் என்பது சர்வ நிச்சயம். இதை மனத்தில் கொண்டு முதல்வர் செயல்பட வேண்டும்.

• தமிழ் நாட்டின் சாலை வசதிகள் மற்றும் அதிதூரப் பயண பஸ் சர்வீசைக் கண்டு மற்ற மாநிலங்கள் வியந்து போகின்றன. மேலும் நற்பெயர் பெற முக்கியமான பஸ் ஸ்டாண்டுகளில் டெலிபோன், டெலெக்ஸ் போன்ற அடிப்படை வசதிகள் அவசியம் செய்து தரப்பட வேண்டும். அங்கு பொதுக் கழிப்பறைகள் எப்போதும் துப்புரவாக இருக்க வழிசெய்ய வேண்டும்.

— செம்பூர் சந்துரு, பம்பாய்.

• அமைச்சர்களின் எண்ணிக்கை எக்காரணத்தைக் கொண்டும் பதினைந்தைத் தாண்டக் கூடாது.

• தனி முயற்சி மேற்கொண்டு தெலுங்கு—கங்கை திட்டப் பணிகளை முழு மூச்சாக முடித்து, சென்னை நகரில் தண்ணீர்ப் பிரச்னையைப் போக்குவதோடு, தமிழ்நாட்டில் எந்தவொரு மாவட்டத்திலும் குடிநீர்த் தட்டுப்பாடு நிலவாதிருக்க உடனடி நடவடிக்கை எடுக்க வேண்டும்.

• தனியார் பள்ளிகளிலும் கல்லூரிகளிலும் நடைபெறும் நன்கொடை வசூல்களைச் சட்டத்தின் மூலம் தடை செய்தே ஆக வேண்டும். தகுதி அடிப்படையில் மாணவர்களைத் தேர்வு செய்ய வழிவகுக்க வேண்டும்.

— சி. கிருஷ்ணசாமி, பொள்ளாச்சி.

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர் வி. வைத்தியநாதன். ஆசிரியர்: கி. ராஜேந்திரன்.
முகவரி: ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை — 600 032. போன்: நிர்வாகக் காரியாலயம்: 4 3154 3, 4 34 157; ஆசிரியர் குழு அலுவலகம்: 4 34 14 5.
ஆண்டுச் சந்தா — உள்நாடு: ரூ. 104/—; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 280/—; விமானத் தபால் ரூ. 680/—.
அரையாதச் சந்தா — உள்நாடு: ரூ. 52/—; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 140/—; விமானத் தபால் ரூ. 340/—.

